# செந்தமிழ்ச் செல்வி



உள்ளுறை



சிலம்பு-௫௭ ] வள்ளுவர் ஆண்டு-௨௦௧௪. சித்திரை. May '83 [பரல்-௯

## 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---

செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ருஎ | திருவள்ளுவர் ஆண்டு உ0கச, சித்திரை மே 1983 | பரல் சு |
| --- | --- | --- |

# தமிழுக்கு நேர்ந்துள்ள புதிய இடர்ப்பாடுகள்

அண்மையில் கோவையில் (17—4—83ல்) நடைபெற்ற முன்னாள் கழக ஆட்சியர் வ. சு. அவர்களின் நினைவுக் கூட்டத்தில், வ. சு. அவர்கள் திருவுருவப் படத்தினைத் திறந்து வைத்து உரை நிகழ்த்திய முனைவர் தா. ஏ. ஞானமூர்த்தி அவர்கள்,

> "முன்னர் வடசொற் கலப்பை நீக்குவதற்குத் தனித் தமிழ் இயக்கம் தோற்றுவிக்கப் பெற்றதுபோல் இப்பொழுது ஆங்கிலம் கலந்து எழுதுவதைத் தவிர்க்க ஆங்கிலங் கலவாத் தனித்தமிழ் இயக்கம் ஒன்று தேவைப்படுகிறது. ஏனெனில், ஆங்கிலங் கலந்த தமிழ்நடையினைப் பார்க்கின்றபோது, மனம் மிக மிக வேதனைப்படுகிறது. இந்நிலை நீடித்தால் எங்குபோய் நிற்குமோ தெரியவில்லை"

என்று குறிப்பிட்டார்கள். முனைவரவர்கள் உளம் நொந்து கூறுகின்ற இக் கருத்துரையினைத் தமிழுள்ளம் படைத்த எவரும் எளிதாக எண்ணி ஒதுக்கிவிட இயலாது.

எங்ஙனம் ஒரு காலத்தில் வடமொழியின் மேலாண்மையினைக் கண்டு வருந்தி, அதனினின்றும் தமிழன்னையை விடுவிக்கக் கருதி மறைமலையடிகளார், மாணிக்க நாயக்கர், பரிதிமாற் கலைஞர், கா. சு. பிள்ளை முதலான அறிஞர் பெருமக்கள் தனித்தமிழ் இயக்கம் கண்டனரோ, அங்ஙனமே இப்போது, தமிழ் எழுத்து நடையில் விரவி மலிந்துவரும் ஆங்கிலத்தின் மேலாண்மையைத் தடுத்து நிறுத்த ஓர் இயக்கம் காண வேண்டிய இன்றியமையாச் சூழ்நிலை ஏற்பட்டுள்ளது.

முன்னர் அறிஞர் பெருமக்கள் தோற்றுவித்த தனித்தமிழ் இயக்கம் வேரூன்றி மரமாகிக் கனிகொடுக்கும் இவ் வேளையில்

ஆங்கிலம் இடையில் புகுந்து அருவருக்கத்தக்க புதியதோர் இடர்ப்பாட்டினைத் தோற்றுவித்துள்ளது.

எம் மொழிமீதும் நமக்குப் பகையோ காழ்ப்புணர்ச்சியோ இல்லை. ஆனால் ஒரு மொழி தமிழில் கலந்து—புல்லுருவியென வளர்ந்து—காலப் போக்கில் தமிழை உருத்தெரியாமற் செய்ய முனையும் போதுதான் அதனை எதிர்க்க நேரிடுகிறது.

ஒரு நாட்டினைக் கைப்பற்ற முதலில் அந்நாட்டு மக்களின் தாய்மொழியினைச் சிதைத்துவிடுதல் ஒருவகைப் போர்முறை என்பர் அறிஞர். அவ் வகையில்தான் தமிழ்நாட்டில் ஆரிய மொழியாகிய சமக்கிருதம் புகுந்து மெள்ளத் தமிழினை வலுவிழந்த மொழியாகச் செய்யும் முயற்சியில் ஈடுபட்டது. இதனை அடி நாளில் உணராத காரணத்தால்தான் மறைமலையடிகளார் போன்ற தமிழ் ஆர்வலர்கள்கூடத் தம்மையும் அறியாமல் சமக்கிருதம் கலந்த தமிழ்நடையினைத் தாராளமாகக் கையாண்டு வந்தனர். பின்னரே—அஃதாவது இற்றைக்கு அறுபது ஆண்டுகட்கு முன்னர்த் தமது எண்ணம், எழுத்து, செயல் அனைத்திலும் தனித்தமிழ் முறையினைக் கடைப்பிடிக்க உறுதி பூண்டனர். அதன் விளைவாகத்தான் சுவாமி வேதாசலம் என்னும் தம் பெயரை மறைமலையடிகள் எனவும், சமரச சன்மார்க்க நிலையம் என்பதனைப் பொது நிலைக் கழகம் எனவும், ஞானசாகரம் என்பதனை அறிவுக் கடல் எனவும் மாற்றியமைத்தனர்.

இஃது புதிய செய்தியன்று. எனினும் அதனை ஈண்டு எடுத்துரைக்கும் காரணந்தான் என்னையோவெனின், அன்று தனித்தமிழ் இயக்கம் தோன்றாதிருக்குமாயின் தமிழின் மாண்பு என்னாகியிருக்கும் என்பதை அன்பர்கட்குச் சுட்டிக்காட்டுதற்கேயாம்.

நன்று; வடமொழியின் வல்லாண்மைதான் வலுக்குன்றி விட்டதேயென நாம் வாளாவிருக்கவோ, அன்றி அமைதி கொள்ளவோ இயலுமோவெனின், இயலாது.

இப்போது தமிழுக்குப் புதிதாக ஓர் இடர்ப்பாடு நேர்ந்துள்ளது. அதுதான் ஆங்கிலம் கலந்த தமிழ்நடை. இதைத்தான் திட்டவட்டமாக எடுத்துக்காட்டுகிறார் முனைவர் ஞானமூர்த்தி. ஆம்; அவர் ஞானமூர்த்தி அல்லரோ! எனவேதான் எதிர்காலம் என்னாகுமோ என எண்ணியுரைக்கின்றார்.

இற்றை நாள் ஏடுகளில் இடம் பெறும் கதைகளிலும், வெளிவரும் புதினங்களிலும் பெரும் விழுக்காடு ஆங்கிலச் சொற்களும் தொடர்களும் விரவிக் காணப்படுகின்றன. 'இஃதென்ன மொழி?'

என்று ஐயுறுமளவிற்குத் தரங்கெட்ட தமிழ்நடையினை நாட்டிலே நடமாட விட்டுள்ளனர் எழுத்தாளர் சிலர்!

"ஹலோ! ஹவ் ஆர் யூ?—கங்ராஜுலேஷன்ஸ்"

"நான் அந்த மேட்டரை அவ்வளவு சீரியசாக நினைக்க வில்லை. பட், அன்பார்சுனேட்லி அப்படி ஆகிவிட்டது!"

"ஹவ் டு யூ டு?- ஐ ஆம் ஆல்ரைட்"

இப்படிச் சில நடைகள். இதுபோன்ற எடுத்துக்காட்டுகள் ஏராளமாகத் தரலாம். விரிவஞ்சி விடுக்கின்றோம்.

முனைவர் ஞானமூர்த்தி அவர்கள் கூறுவதுபோல் இந்நிலை எங்குபோய் நிற்குமோ தெரியவில்லை. கதைகள் எத்துணைச் சுவைமிக்கனவாயினும் சோற்றில் கல் கலந்ததுபோல் இடையிடையே இப்படிப் பல ஆங்கிலச் சொற்கள் குறுக்கிடுமாயின் தங்குதடையின்றிப் படித்தற்குத்தான் இயலுமா? படிப்போர் அத்துணைபேரும் ஆங்கிலமும் தெரிந்தவர்களாகவே இருத்தல் இயலுமோ? நல்ல தமிழ் மட்டுமே பயின்றவர்கட்கு இத்தகைய சொன்னடைகள் எவ்வளவு குழப்பத்தை உண்டு பண்ணும்! இதனால் எழுதுபவர்க்கோ, அதனைப் படிப்பவர்க்கோ என்ன நன்மை?

இன்னுஞ் சிலர் ஆங்கிலச் சொற்களை இடையிடையே ஆங்கில வரிவடிவிலேயே எழுதுகின்றனர். என்னே விந்தை!

"ஆங்கிலம் கலந்த சொற்றொடர்கள் இயல்பாகப் பேச்சிலே கலந்து வருகின்றன. இது நாட்டு நடப்பாக உள்ளது. அதைத் தானே நாங்கள் அப்படியே எடுத்து வைக்கிறோம். அதுதானே இக்கால நாகரிகம்?" என்று சிலர் தம் செயலுக்கு விளக்கந் தரலாம்.

ஆங்கிலச் சொற்றொடர்கள் ஒலிவடிவிலே வரும்போதாயினும், அவற்றைச் செவிப் புலனால் ஓரளவு புரிந்துகொள்ளலாம். ஆனால், அவையே வரிவடிவில் வரும்போது படிப்போர் எத்துணை இடர்ப்படுகின்றனர் என்பதை இவர்கள் உணர்வதில்லை.

இவை வேண்டுமென்றே தமிழுக்குக் கேடு சூழ்வோர் செயலாகவன்றோ இருக்கின்றன! ஆங்கிலம் கலவாமல் இவர்களால் எழுத இயலாதா?அல்லது எழுதத் தெரியாதா? பின்னர் எற்றுக்கு இத்தகைய அவல நிலையினை உண்டு பண்ணுகின்றனர்!

அறிஞர் மு. வரதராசனார் அவர்கள் புதினங்களை எழுதவில்லையா? அகிலன் போன்ற எழுத்தாளர்கள் பல அரிய படைப்புகளை உருவாக்கவில்லையா? அவற்றுக்கெல்லாம் நாட்டு மக்களிடையே வரவேற்பில்லாமலா போயிற்று?

இதனால் இவர்களெல்லாரும் இலக்கியத் தனித்தமிழ் நடையிலேயே எழுத வேண்டும் என்று நாம் வற்புறுத்தவில்லை. எழுத்து நடையிலே எளிமை இருக்கட்டும்—இனிமை இருக்கட்டும்—தெளிவு இருக்கட்டும். குழப்பம் இருக்கலாமா?

இவற்றை யெல்லாம் எண்ணுகின்றபோது நல்லறிவு படைத்த எவர்தாம் கவலைப்படாதிருக்கக்கூடும்?

எனவே, ஆங்கிலக் கலவை நடை எழுதும் எழுத்தான அன்பர்களைக் கேட்டுக் கொள்ளுகிறோம்; அன்பர்களே! நீவிர் நாட்டு நலங்கருதி, இனியேனும் இப்படிப்பட்ட—கொச்சை—கலவை நடையில் உங்களுடைய படைப்புகளை அருள் கூர்ந்து நாட்டு மக்களிடையே நடமாட விட்டு அவர்தம் தமிழ் உணர்வைக் கெடுக்காதீர்கள்! அதுதான் நீவிர் செய்யத்தக்க நல்ல தமிழ்த் தொண்டு, என்று விரும்பி வேண்டிக் கேட்டுக் கொள்ளுகிறோம்.

அத்துடன், இத்தகைய ஆங்கிலக் கலவைத் தமிழை அகற்றும் முயற்சியில் தமிழகப் புலவர்குழு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தமிழ்ப் பேராசிரியர்கள் ஆகியோரும் ஈடுபடுதல் வேண்டும். அவர்கள் இதனை ஓர் இயக்கமாகக் கருதி அறிக்கைகள் விடுத்தும், கருத்தரங்குகள் நடத்தியும், மாநாடுகள் கூட்டியும் ஆவன செய்தல் சாலப் பயன்தரும் பணியாகும் என்பதையும் ஈண்டு, சுட்டிக்காட்ட விழைகின்றோம்.

"செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும்" (குறள் - 466)

———

## ஆங்கிலம் அன்றும் இன்றும்

ஆசிரியர் 'பெயன்', 'மிக்கின்', 'ஜான்' முதலானவர்கள், தமது ஆங்கில மொழியைத் தூயதாகப் பிறமொழிச் சொற்கள் கலவாமல் எவ்வளவு அதனைப் பாதுகாத்து வழங்கக் கூடுமோ அவ்வளவுஞ் செய்ய வேண்டும் என்று வற்புறுத்தி எழுதியிருக்கின்றார்கள். இன்றைக்கு ஐந்நூறாண்டுகட்கு முன்னிருந்த ஆங்கில மொழியும், இன்றைக்கு மூந்நூறாண்டுகட்கு முன்னிருந்த ஆங்கில மொழியும் வெவ்வேறு மொழிகள்போல் மாறிவிட்டமையால், அக்காலத்தில் எழுதப்பட்ட நூல்களை இப்போது ஆங்கிலம் பயிலுகின்றவர்கள் தெரிந்துகொள்ள முடியாதவர்களாயிருக்கின்றார்கள். 'சாசர்' எழுதிய நூல்களையும் 'ஷேக்ஸ்பியர்' எழுதிய நூல்களையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இவ்வுண்மை நன்கு விளங்கும்.

—மறைமலையடிகள்

(மறைமலையடிகளார் உரைமணிக்கோவை, பக். 63-64)

# திருக்குறளும் கலைச்சொல்லாக்கமும்

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

திருக்குறள் "மாந்தர் வாழ்வாங்கு வாழ்வதற்காகவே" அருளப்பெற்ற நூல். அத் தலைமை நோக்கால் அருளப்பெற்ற நூலிலே அமைந்து கிடக்கும் இலக்கிய நயங்கள், கலைச் சிறப்புகள், நாடக உத்திகள், சொல்லாக்கத் திறங்கள் இன்னன பலப்பலவாம். இந்நாளில் இன்றியமையாது வேண்டத் தக்கதாக அமைந்துள்ள கலைச்சொல்லாக்கத்திற்குத் திருக்குறள் எவ்வெவ்வாறு பயன்பட்டுள்ளது என்பதைச் சுட்டுவது இக் கட்டுரை. இச் சுட்டுதல், திருக்குறளையும் மற்றைப் பழந் தமிழ் நூல்களையும் கலைச் சொல்லாக்க வைப்பாக்கிக் கொள்ளுதற்குத் தூண்டுதலாக அமைய வேண்டும் என்னும் நோக்கில் எழுந்ததாகும்.

அகராதி :

அகராதி என்பது, அகர முதலாக அமைந்த அடங்கல் முறைப்படி சொற்களை அமைத்து, அவற்றுக்குப் பொருள் கூறும் நூல் என்பது எவரும் அறிந்ததே. அகரத்தை ஆதியாகக் கொண்டு இயல்வதால் அகராதிப் பெயர் பெற்றது என்பது வெளிப்படை.

அகராதிகள் பலப்பல இக்காலத்துக் காணப்பெறுகின்றன. 'சதுரகராதி' தமிழ் கண்ட முதலகராதி எனினும், அதற்கு முன்னரே நிகண்டு நூல்கள் விளங்கின. தொல்காப்பிய இலக்கண நூலிலும் அகராதியின் முத்திரையுண்டு. நிகண்டுகளிலே அகராதி நிகண்டு என்பது அகராதிப் பெயரை முதற்கண் வழங்குகின்றது. அதற்கு முன்னரே தொல்காப்பியம், "அகர முதல னகர இறுவாய்" என்றும், திருக்குறள், "அகர முதல எழுத்தெல்லாம்" என்றும் அகர முதன்மையைத் தலைப்படக் காட்டின. திருக்குறள் ஆட்சியில் தோய்ந்தவர்களுக்கு, "அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு" என்னும் முதற் குறள் வழியே, 'அகர' 'ஆதி'ச் சொற்களும் அவற்றின் இணைப்பாகிய 'அகராதி'யும் கைவந்துவிட்டன.

அகர முதலி :

இந்நாளில் அகராதி 'அகர முதலி' என வழங்கப் பெறுகிறது. அதனை வழக்குப்படுத்திய செம்மல் மொழிஞாயிறு பாவாணராவர்.

அவர் 'அகர முதலி' என்பதற்கு அடியாக அமைந்ததும் மேலே கூறிய இரு தொடர்களேயாம். 'அகர முதலாக அமைந்த நூல்,' 'அகர முதலி' ஆயிற்று. ஆகலின், தேர்ச்சி மிக்க புலமையாளர் இயல்பாக வழங்கும் சொற்களும் கலைச் சொற்களாகக் கமழு கின்றன என்று கொள்ளலாம்.

நிறைகோல்; சமன்கோல்:

நிறை காண்பதற்கு ஒரு கோல் பயன் படுகிறது. அதனை நிறை கோல் என்பது வழக்கு. அதனைத் தூக்கி எடை பார்த்தலால் 'தூக்கு தூக்குக் கோல்' என்பதும் வழக்கு. தன்கண்வைத்த பொருளைச் செவ்வையாக நிறுத்துக் காட்டலின் 'சமன் கோல்' என்றும் கூறினர். சமன்கோல் 'ஞமன் கோல்' எனவும் ஆளப் பெறும். இச் சமன்கோல் என்னும் கலைச் சொல் எப்படிக் கிடைத்தது? "சமன் செய்து சீர்தூக்கும் கோல்" என்றார் திருவள்ளுவர். சமனும் கோலும் இணைந்து 'சமன் கோல்' எனக் கலைச் சொல்லாக்கம் பெற்றது.

சீரை:

இனிச் சமன் கோலுக்குச் 'சீரை' என்றொரு பெயரும் உண்டு. 'சீரை' என்பது செம்மைக்கு அல்லது சீர்மைக்குச் சான்றாக அல்லது அளவிடாக அமைந்தது என்பது பொருள். இச் சீரை என்னும் கலைச் சொல் எப்படி வாய்த்தது? 'சீர் தூக்கும் கோல்' என்றாரே திருவள்ளுவர். சீர் தூக்குவது சீரை ஆயிற்று. 'சீரை புக்க தூயோன் சிபி' எனப் பாடு புகழும் பெற்றான்.

எழுது கோல்:

எழுதுகோல் இந்நாளில் பெருக வழங்குகிறது. முந்து எழுத்தாணி, ஊசி என்பவையே வழங்கின. இக்கால எழுது கோல் என்னும் கலைச் சொல் எப்படிக் கிடைத்தது? "எழுதுங் கால் கோல் காணாக் கண்ணேபோல்" என்னும் திருக்குறள் எழுது கோலைத் தந்துவிட்டது. காலை ஒதுக்கிக் கோலொடு ஒட்டிவிட்டார்கள். 'எழுதுகோல்' எனக் கலைச் சொல் ஆகிவிட்டது.

அளவுகோல்:

இன்னொரு கோலும் திருவள்ளுவர் வழங்குகிறார். அளவு கோல் என்னும் நீட்டல் அளவைக் கோல் அது. எப்படிக் கிடைத்தது அது? வறுமைப் போழ்துகூட நலத்தக்க—ஏன்? நயத்தக்க—

போழ்துதான்! ஏனெனில், உண்மையான உறவாளர் எவர் என்பதை உறுதிப்படுத்தித் தருவது அந்த வறுமைப் போழ்தே என அறங் கூற வரும் திறவோர் வள்ளுவர், ''கேட்டிலும் உண்டோர் உறுதி கிளைஞரை, நீட்டி யளப்பதோர் கோல்'' என்கிறார். இதில் வரும், 'நீட்டியளப்பதோர் கோல்' இடைவிட்டும் செறிந்தும் இயைந்தும் நீட்டல் கோலையும், அளவு கோலையும் தந்துவிட்டதே! 'அளக்குங்கோல்' என்றும் குறிக்கிறார் வள்ளுவர் (710)

நாட்காட்டி :

நீட்டியளக்கும் கோல் நிற்கட்டும். காட்டி அளக்கும் காலக் குறி ஒன்றுள்ளதே. அதற்கு 'நாட்காட்டி' யெனப் பெயர் வைத்து அழைக்கிறோமே! இந் நூற்றாண்டின் கொடைதானே, தாளைக் கிழித்து. நாளைக் கழித்த கணக்கை அறிவது. நெட்ட நெடுங் காலத்தின் முன்னர் வாழ்ந்த வள்ளுவப் பெருந்தகை அல்லரோ 'நாட்காட்டி' என்னும் கலைச் சொல்லை வழங்கினர்.

> ''நாளென ஒன்றுபோற் காட்டி உயிரீரும்
> வாளது உணர்வார்ப் பெறின்''

என்னும் குறளில் 'நாளென ஒன்றுபோற் காட்டி'யதைத் தானே 'நாட் காட்டி' யாகக் குறுக்கி வைத்துக்கொண்டோம்? இந்நாளில் நாட்காட்டி மட்டுமோ வழங்குகின்றது? 'நாட் குறிப்பு'ம் நம் கையில் தவழ்கின்றதே! நாட்சரி (தினசரி) கூட நடக்கின்றதே! 'நாட்படி'க்கு இருக்கும் மதிப்பும் வேட்கையும் நாமறியாதனவா?

மகப்பேறு :

'குடும்பத்திட்டமும்' 'குடும்பக் கட்டுப்பாடும்' பேசாத நாள் உண்டா? விளம்பரப்படாத சுவருண்டா? தாளுண்டா! மருத்துவ மனைகளிலோ பொதுவிடங்களிலோ முதற்கண் காட்சி வழங்குபவை இவ்விளம்பரங்கள் தாமே! வள்ளுவர் 'மக்கட்பேறு' என்று ஓர் அதிகாரம் வகுத்துள்ளார் அல்லரோ? மக்கட்பேறும் மகப்பேறும் ஒன்றுதானே! மகப்பேற்று மருத்துவமனைகள் நகர்ப்புற வாழ்க்கைக்கு இன்றியமையாத் தேவையாயிற்றே இப்பொழுது!

வாழ்க்கைத்துணை :

காதல் இருபாலுக்கும் பொது; மகப்பேற்றுக் கடமையும் மனை வாழ்வும் இருபாலும் இயைந்த ஆக்கமேயாம். ஆனல்

இவ் விருபாலுள் இயற்கை ஆண்மைக்கே முதன்மை தந்தது. காதல் கிளர்ந்து அரும்பி முகிழ்ப்பவர் ஆகட்டும்—கடிமணத் திற்கு முற்பட நின்று ஏற்பாடு செய்பவர் ஆகட்டும்—மணவறை யில் முதற்கண் அமர்த்தப்பெறுபவர் ஆகட்டும்—ஆடவரே அல்லரோ! அவர் கொடை வழங்கப்பெறுதற் குரியவரும், உடை வழங்கப்பெறுதற் குரியவரும் ஊறுவந்த காலையில் உதவப் பெறுதற் குரியவரும் மகளிரே அல்லரோ! பெரும்பாலும் வன்மையாய் அமைந்த ஆண்மை, பெரும்பாலும் மென்மை யாய் அமைந்த பெண்மையைப் பேணிப் போற்றுதல் கடமையாம் என்று கொண்டேயன்றோ—பண்டு முதல் இருபாலுக்கும் ஒத்த உரிமை கண்ட தமிழகம்—பெண்மையை 'வாழ்க்கைத்துணை' என்றது. அவ் வாழ்க்கைத் துணைநலத்தை வள்ளுவம் போல் சிறப்பிக்கும் நூலும் அரிதேயன்றோ! வள்ளுவர் வாழ்க்கைத் துணை நலம் மட்டுமோ பேசினார்? 'வாழ்க்கைத் துணை' என்னும் கலைச் சொல்லையும் அல்லவோ வழங்கினார்? (தொடரும்)

---

## குமரகுருபரர் குழந்தை வளர்ப்புப் பள்ளி 15ஆவது ஆண்டுவிழா

9—3—83ல், நெல்லை, வின்றசேர் நெடுமாறன் கலை அரங்கில் மாவட்ட முதன்மைக் கல்வி அதிகாரி சிவதாணுப்பிள்ளை அவர்கள் தலைமையில், குமரகுருபரர் குழந்தை வளர்ப்புப் பள்ளியின் 15 ஆவது ஆண்டுவிழா நடைபெற்றது.

தலைவரவர்கள் தமது தலைமை உரையில் இப்பள்ளியில் பிள்ளை கட்குக் கல்வியோடு எல்லா நற்பண்புகளும் கற்பிக்கப்படுவதாக வும், முப்பது பிள்ளைகளுடன் துவக்கப்பெற்ற இப் பள்ளியில் இன்று 450 பிள்ளைகள் படிக்கிறார்கள் என்றால் அதிலிருந்தே இப் பள்ளியின் முன்னேற்றத்தைத் தெரிந்துகொள்ளலாமென்றும் குழந் தைகட்குத் தேவார திருவாசகப் பாடல்கள்மூலம் பக்தி புகட்டப் படுவது பாராட்டத்தக்கதென்றும் கூறினார்.

திருவாட்டி மந்திரமூர்த்தி அவர்கள் பரிசுகளை வழங்கினார். தலைமையாளர் திரு. பிச்சுதாயப்பன் அவர்கள் நன்றி நவில விழா இனிது நிறைவுற்றது.

## கோவையில் தாமரைச் செல்வர், வ. சு. நினைவுக் கூட்டம் (17-4-83)



தவத்திரு. இராமசாமி அடிகளார் தலைமை உரை ஆற்றுதல். உடனிருப்போர் : கழக ஆட்சியர், இரா. முத்துக்குமாரசாமி, மாவட்ட உயர்கல்வி அதிகாரி திருமதி. மீனாட்சி அவர்கள், டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்தி ஆகியோர்



அருட்பா அரசு கிரிதாரி பிரசாத் அவர்கள் சிறப்புச் சொற்பொழிவாற்றுதல்

# கோவையில் வ. சு. நினைவுக் கூட்டம்

முன்னாள் கழக ஆட்சியர், தாமரைத்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களின் பணிநலம் பாராட்டுமுகத்தான் 17—4—83ல், கோவை சன்மார்க்க சங்கக் கட்டிடத்தில், தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி முதல்வர், தவத்திரு இராமசாமி அடிகளார் அவர்கள் தலைமையில் நினைவுக் கூட்டம், கோவை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகக் கிளை நிலயத்தின் சார்பில் நடைபெற்றது.

முன்னுரை

இந்நாள் கழக ஆட்சியர் உயர்திரு. இரா. முத்துக்குமாரசாமி எம்.ஏ., பி.லிப்., அவர்கள் தமது முன்னுரையில்,

மறைந்த தாமரைச் செல்வர் வ. சு. அவர்கள் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தை ஒரு புத்தகப் பதிப்பு நிலயமாக மட்டுமன்றித் தமிழ் வளர்ச்சி இயக்கமாகவே நடத்தி வந்தார்கள் என்றும், பல அறநிலயங்களை ஏற்படுத்தித் திட்டமிட்டுச் செய லாற்றி வந்தனர் என்றும், அதனால்தான் மைய அரசு அவருக்கு 'பத்மஸ்ரீ' விருதினையும், தமிழக அரசு 'செந்தமிழ்ச்செல்வர்' என்னும் விருதினையும், மதுரை காமராசர் பல்கலைக் கழகம் 'பேரவைச் செம்மல்' என்னும் விருதினையும் வழங்கிச் சிறப்பித் துள்ளன என்றும் கூறினார்கள்.

படத்திறப்பு

அடுத்து ஐயா அவர்களின் திருவுருவப் படத்தினைத் திறந்து வைத்துப் பேசிய டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்தி அவர்கள்,

"உயர்திரு. சுப்பையா பிள்ளை அவர்களை நினைக்கும்போது, எனக்கு 1932ஆம் ஆண்டு நினைவுக்கு வருகின்றது. அப்போது தான் நான் திரு. சுப்பையா பிள்ளை அவர்களை முதன் முதலாக பா. வே. மாணிக்க நாயக்கர் மாளிகையில் சந்தித்தேன். எனக்கும் மாணிக்க நாயக்கர் குடும்பத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. சுப்பையா பிள்ளை அடிக்கடி மாணிக்க நாயக்கர் மாளிகைக்கு வருவ துண்டு. அப்போதெல்லாம் அவர்கள், தமிழ் இலக்கியம்பற்றியும் தமிழ் வளர்ச்சிபற்றியும் பல மணிநேரம் உரையாடுவார்கள்.

"மாணிக்க நாயக்கர் இயற்றிய Mystic aspects of Tamil Alphabet" என்னும் அரிய நூலினை இவர்கள் பதிப்பித் துள்ளார்கள். அது எல்லாரும் படிக்கவேண்டிய புத்தகம். தனித் தமிழ் இயக்கத்தில் திரு. சுப்பையா பிள்ளையவர்கள் பேரீடுபாடு கொண்டிருந்தார்கள். அந்தக் காலத்தில் வடசொல் கலந்து

எழுதுவதுதான் பெருமை என்ற நிலை இருந்தது. மறைமலை யடிகள் தனித்தமிழ் இயக்கத்தைத் தோற்றுவித்தபின் அந்த இயக்கத்திற்கு உறுதுணையாக இருந்தவர் திரு. பிள்ளை அவர்களாவார்கள். அவர்கள் இல்லையென்றால் தனித்தமிழ் இயக்கம் எப்போதோ மறைந்துபோயிருக்கும். தமிழ் என்றும் அழியாதது. கடவுளால்கூட அதனை அழிக்க முடியாது.

"ஆனால், இப்போது வடசொல்லுக்குப் பதிலாக ஆங்கிலம் கலந்து எழுதும் நிலைமை தோன்றியுள்ளது. இப்போதெல்லாம் ஆங்கிலம் கலவாத தமிழ் நாவல்களையே காணமுடிவதில்லை. இது இப்படியே போய்க்கொண்டிருந்தால், தனித்தமிழ் இயக்கம் என்னாவது? முன்னர் வட சொல் கலப்பை நீக்குவதற்குத் தனித் தமிழ் இயக்கம் தோற்றுவிக்கப் பெற்றதுபோல் ஆங்கிலம் கலந்து எழுதுவதைத் தவிர்க்க ஆங்கிலங் கலவாத் தனித் தமிழ் இயக்கம் ஒன்று தேவைப்படுகிறது. ஏனெனில் ஆங்கிலம் கலந்த தமிழ் நடையைப் பார்க்கின்றபோது மனம் மிக மிக வேதனைப்படுகின்றது" என்றார்.

அவர் மேலும் பேசுகையில் "நம்முடைய இலக்கியங்களில் ஆங்கிலம் கலவாத தனித் தமிழே இடம்பெறச் செய்ய ஓர் இயக்கத்தை நடத்த வேண்டுமென்று நம்முடைய கழக ஆட்சியர் திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். அவர்கள் ஒருதமிழ்ப் புலவர்—அறிஞர்—தமிழும் ஆங்கிலமும் கற்றவர். எனவே அவர்கள் இதனைச் செய்வார்கள் என்று நம்புகிறேன் இதனை ஏன் வலியுறுத்திக் கூறுகிறேன் எனில் இப்போது தமிழுக்கு நேர்ந்துள்ள இத்தகைய புதிய கேடுகளை எண்ணி மிக மிகவேதனைப்படுகிறேன்" என்று குறிப்பிட்டார்கள்.

### தலைமை உரை

அடுத்து தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி முதல்வர் தவத்திரு. இராமசாமி அடிகளார் தலைமை உரை ஆற்றினர். அவ்வுரையில்,

"திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் தமிழுக்காகவும் சைவத்திற்காகவும் சிறந்த பணிகள் ஆற்றியுள்ளார்கள். சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 1700க்கு மேற்பட்ட நூல்களைப் பதிப்பித்த ஒரு வளமான நிறுவனமாகத் திகழ்வதற்குத் திரு. சுப்பையா பிள்ளை அவர்களின் சிறந்த உழைப்பே காரணமாகும். இவரது உழைப்பின் காரணமாகவே மறைமலையடிகள் நூல் நிலையம் ஒரு சிறந்த ஆராய்ச்சி நிலையமாகத் திகழ்கிறது. இவர் தமது இறுதிக் காலம் வரை தளர்ச்சியுறாமல் உழைத்துக் கழகத்தை வளர்த்தார். அத்துடன் கடந்த ஐம்பதாண்டுகட்கு மேலாகச் 'செந்தமிழ்ச்

செல்வி' என்னும் இதழைத் திறம்பட நடத்தி வந்தனர். செந்தமிழ்ச் செல்விதான் தனித்தமிழ் இயக்கத்தை வளர்த்து வந்திருக்கிறது. அதில் பேரறிஞர்களுடைய எழுத்தோவியங்கள் இடம் பெறுகின்றன. சுப்பையா பிள்ளை அவர்கள் எதையும் தாமே செய்ததாகச் சொல்லிக்கொள்ள மாட்டார். அவர் தமையனார் திருவரங்கம் பிள்ளையினையும், மறைமலையடிகளாரையும் முன் வைத்தே பேசும் பழக்கமுடையவர். அப்படிப்பட்ட பண்பாளர் அவர்'' என்று கூறினார்.

*சிறப்புரை*

அடுத்து வ. சு. அவர்கள் தமிழ் மொழிக்கும்—நாட்டுக்கும்—தமிழ் இனநலத்துக்கும் ஆற்றிய தொண்டுகள் பற்றிக் கோவை முதன்மைக் கல்வி அதிகாரி திருமதி மீனாட்சி அவர்கள், பு. சா. கோ. கலைக் கல்லூரிப் பேராசிரியர், டாக்டர் ஈ. கோ. பாஸ்கர தாஸ் அவர்கள், தேசிய தனிப் பயிற்சிக் கல்லூரிப் பேராசிரியர், கு. வே. கி. ஆசான் அவர்கள், வேளாண்மைப் பல்கலைக் கழகம் பேராசிரியர் இல. செ. கந்தசாமி அவர்கள், சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி சிறப்புப் பேராசிரியர் டாக்டர் ம. ரா. போ. குருசாமி அவர்கள், பூ. சா. கோ. கலைக்கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் இராசமாணிக்கம் அவர்கள் ஆகியோர் சிறப்புரை ஆற்றினர்.

*நன்றி உரை*

இந்நாள் கழக ஆட்சியர் உயர்திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள் தமது நன்றி உரையில், டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்தி அவர்கள் கூறிய அறிவுரைகளின்படி மறைமலையடிகளார் வழி நின்றும், மறைந்த வ. சு. அவர்கள் வழி நின்றும் தனித்தமிழ் இயக்கத்தை மேலும் வலுவுறச் செய்ய, தம்மாலியன்ற அனைத்தையும் செய்வதாக உறுதி கூறியதோடு, தமிழ் அறிஞர்களும் அன்பர்களும் அதற்கு ஆக்கமும் ஊக்கமும் அளிக்கும்படி கேட்டுக்கொண்டார்.

———

## பாவேந்தர் பாட்டைப் படி

[பாவலர் 'இடிமுரசு' சென்னை]

(வெண்பா)

வீழ்ந்த பழவீரம் வீறிட் டெழுந்திடவும்
தாழ்ந்த தமிழரினம் தானோங்க - ஆழ்கடல்போல்
பாவெல்லாம் மின்பாய்ச்சிப் பாரோர்க் குணர்வூட்டும்
பாவேந்தர் பாட்டைப் படி

# கோவலன் பாடிய கானல்வரி

[க. சி. கமலையா]

### கானலும் வரியும்

கானல், வரி என்ற இரண்டு சொற்களாலாயது 'கானல்வரி' என்ற சொற்றொடர். கானல் என்பது கடற்கரையையும் அதை யொட்டியுள்ள பொழிலையும் வரியென்பது கூத்துடன் தொடர் புள்ள இசைப்பாக்களையும் குறிப்பனவாகும். கானல்வரி என்றாலே கானல்வரிப் பாடல்தான். கோவலன் ஆடல்மகள் மாதவிமீது அள்ளியெறிந்த குற்றச்சாட்டில் நடிப்புகள் எட்டும் வரியென்றே குறிப்பிடப்படுகின்றன. அவையாவன: கண்கூடு வரி, காண்வரி, உள்வரி, புறவரி, கிளர்வரி, தேர்ச்சிவரி, காட்சி வரி, எடுத்துக்கோள்வரி. வரியாவது அவரவர் பிறந்த நிலத் தன்மையும் பிறப்பிற்கேற்ற தொழிற்றன்மையும் தோன்ற நடித் தல் என்று பொருள் கூறி மேற்கோள் காட்டுவர் அடியார்க்கு நல்லார்.

### ஆற்றுவரிப் பாடல்

கோவலன்றன்னெடும் வெண்காலமளிமிசை இருந்த மாதவி தோழிகொடுப்ப யாழைத் தொழுது வாங்கி அதைத் திருத்தி 'என்னுடைய ஏவலன்று, பாணியாது?' எனச் சொல்லிக் கோவல னிடம் நீட்ட அவனும் கானல்வரிப் பாணியைப் பாடத் தொடங் கினான். அவனுடைய தொடக்கப் பாடல்கள் மூன்றும் ஆற்றுவரி யாகும். இந்த ஆற்றுவரிப் பாடல்கள் வரிப் பாடலுக்கு முகமாக நிற்றலின் 'முகமுடைவரி' என்பதில் அடங்கும். கங்கைப் பகுதி யிலும் குமரிப் பகுதியிலும்சோழன் கோலோச்சினும் அவன் காவிரிக்கே உரித்தாவான். காவிரி நடக்கும் பகுதிகளில் அவன் செவிமடுக்கும் ஒலிகளே சோணாட்டின் வளத்தை விளம்பும்.

உழவ ரோதை மதகோதை யுடைநீ ரோதை தண்பதங்கொள்
விழவ ரோதை சிறந்தார்ப்ப நடந்தாய் வாழி காவேரி
விழவ ரோதை சிறந்தார்ப்ப நடந்தவெல்லாம் வாய்காவா
மழவ ரோதை வளவன்றன் வளனே வாழி காவேரி.

வரி மூன்று வகைப்படும். அவை: (1) முகமுடைவரி, (2) முக மில்வரி, (3) படைப்புவரி என்பன.

### சார்த்துவரிப் பாடல்

கோவலன் பாடிய அடுத்த மூன்று பாடல்கள் சார்த்துவரி யாகும். 'பாட்டுடைத் தலைவன் பதியோடும் பேரோடும், சார்த்திப் பாடிற் சார்த்தெனப் படுமே' என்று மேற்கோள் காட்டுவர் அரும் பதவுரையாசிரியர். தோழி தலைமகன் முன்னின்று வரைவு

கடாயவை இம் மூன்று பாடல்களும். முகச் சார்த்து, முரிச்சார்த்து, கொச்சகச் சார்த்து என்ற மூன்று வகைகளில் கோவலன் பாடியது முகச்சார்த்தாகும். பாட்டுடைத் தலைவன் சோழன். 'காதலராகி ஏதிலர்போல் எம்முன் வந்தோரை யாமறியோம். மாதர் கண்ணென்றும் மலர்ந்த நீலப்போதென்றும் வேறுபாடறியாது வண்டுசலாடும் புகாரே எம்மூர் என்று கோவலன் பாடினான்.

> காதல ராகிக் கழிக்கானற் கையுறைகொண் டெம்பின் வந்தார்
> ஏதிலர் தாமாகி யாமிரப்ப நிற்பதையாங் கறிகோமைய
> மாதரார் கண்ணு மதிநிழனீ ரிணைகொண்டு மலர்ந்த நீலப்
> போது மறியாது வண்டூசலாடும் புகாரே யெம்மூர்.

**கானல்வரிப் பாடல்**

மேலும் பாடின கோவலன் பாடல்களில்ஒன்று, குறியிடத்துச் சென்ற பாங்கன் தலைமகளது காதல் மிகுதி குறிப்பினுனறிந்து கூறியதாகும். முகமில்வரி என்பதுள்ளடங்கும் பாடல் 'அணி யிழைதன் நோய்க்குத் தானே மருந்து' என்ற பொருள் கொண்டது. முகமில்வரியாவது முகமொழிந்து ஏனையுறுப்புகளான் வருவது. நிறைமதிவாள் முகத்துக் கயல்நேர் கண்ணியாலுண்டான நோயை அவள் மென்முலையே தீர்க்கும் போலும். பின் தொடரும் இரண்டு பாடல்களும் கானல்வரிப் பாடல்களாம். கோவலனும் மாதவியும் பரிமாறிக் கொண்ட பலவகை வரிப் பாடல்கள் கானலில் நிகழ்வதால் கானல்வரி எனப் பெயர் கொண்டன. நெய்தல் நிலக் காட்சியைப் பகரும் பாடல்களே கானல்வரி என்ற தொகுப்பிலடங்கும். உலரும் மீன்களினின்றும் பறவைகளை ஓட்டும் சாக்குச் சொல்லி 'அணங்குறையும் பூங்காவனம் என்றறியேன்' என்றெல்லாம் உரைக்கின்றான் தலைவன்.

**நிலைவரிப்பாடல்**

தமியளாக எதிர்ப்பட்ட தலைவியை நோக்கித் தலைவன் கூறியதை அடுத்துவரும் மூன்று பாடல்களில் காணலாம். நிலைவரி என்ற தொகுப்பில் அவையடங்கும்.

> கயலெழுதி வில்லெழுதிக் காரெழுதிக் காமன்
> செயலெழுதித் தீர்ந்தமுகந் திங்களோ காணீர்.
> திங்களோ காணீர் திமில்வாழ்நர் சீறூர்க்கே
> யங்கணேர் வானத் தரவஞ்சி வாழ்வதுவே.

கயற்கண்; வில்லொத்த புருவம்; கார்மேகக்குழல்; நிறைமதி முகம்: ஆங்கெழுதிய காமன் செயல். வானத்தரவம் பற்றிக் கொள்ளுமோ என்றஞ்சிச் சிற்றூரில் வாழ்கின்றதோ அந்நிலா,

என்று பூரிக்கின்றான் தலைவன். "இருமருங்கு மோடுகின்ற விழிவேல் கண்ணோ அன்றிக் கடுங்கூற்றமா?" என்றும் ஐயுறு கின்றான் தலைவன்.

எறிவளைக ளார்ப்ப விருமருங்கு மோடுங்
கறைகெழுவேற் கண்ணோ கடுங்கூற்றங் காணீர்
கடுங்கூற்றங் காணீர் கடல்வாழ்நர் சிறார்க்கே
மடங்கெழுமென் சாயல் மகளாயதுவே.

திருக்குறட்பாவொன்று இங்கு நினைவுகூரத் தக்கது.

பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு.

முகவரிப்பாடல்

முகவரியாவது, 'எடுத்த வியலு மிசையுந் தம்மின், முரித்துப் பாடுதல்' பாங்கன் கேட்பத் தலைமகன் உற்றதுரைக்கின்றான். "என்னை இடர் செய்தவை எவையென்று கேட்கின்றாய். பழுதறு திருமொழி, பணையிள மார்பு, முகமதி முகம், முரிபுருவில், எழுதற் கரிய மின்னிடைதாம். இளையவள் கயல்விழியும் மருவிரிபுரி குழலும் என்னை இடர் செய்தவை."

பொழிதரு நறுமலரே புதுமணம் விரிமணலே
பழுதறு திருமொழியே பணையிள வனமுலையே
முழுமதி புரைமுகமே முரிபுரு வில்லிணையே
எழுதரு மின்னிடையே யெனையிடர் செய்தவையே.

திணைநிலைவரிப் பாடல்

கோவலன் இறுதியில் பாடிய ஏழு பாடல்களும் திணைநிலை வரியாகும். நிலைவரியில் திணையையும் இணைத்துப் பாடியவை எனக் கொள்ளலாம். 'கடல்புக்குயிர் கொன்று வாழ்வர் நின்னையர்,' 'கொடுங்கண் வலையால் உயிர்கொல்வான் உந்தை' என்றெல்லாம் நெய்தலைக் குறிக்கின்றான். 'நீயே உடல்புக் குயிர் கொன்று வாழ்வை' என்றும் உரைக்கத் தலைவன் தவறவில்லை. இவ்வேழு பாடல்களில் முதல் மூன்று பாடல்கள் தலைவியுடன் கூடிய தலைவன் கூறுவதாகும்.

ஓடுந் திமில்கொண் டுயிர்கொல்வர் நின்னையர்
கோடும் புருவத் துயிர்கொல்வை மன்னீயும்
பீடும் பிறரெவ்வம் பாராய் முலைசுமந்து
வாடுஞ் சிறுமென் மருங்கிழவல் கண்டாய்.

அடுத்துவரும் மூன்று பாடல்களும் 'குறியிடத்துக் கண்ட பாங்கன் சொல்லியவை, புணர்ந்து நீங்குவான் விடுத்தலருமையான்

ஆற்றுனுய்த் தன்னெஞ்சிற்குச் சொல்லியவைவ்யுமாம்' என்பார் அரும்பதவுரையாசிரியர். 'தலைவியின் செங்கண் குவளையல்ல, கொடிய கொடிய; மலர்க்கையால் மீன்வற்றலைக் கௌவிச் செல்லும் புள்ளை யோட்டுவாளின் கூர்மையான விழிகள் கொடிய கூற்றம்' என்று ஓவியம் தீட்டுகின்றுன் தலைவன்.

கள்வாய் நீலங் கையி னேந்திப்
புள்வா யுணங்கல் கடிவாள் செங்கண்
புள்வா யுணங்கல் கடிவாள் செங்கண்
வெள்வே லல்ல வெய்ய வெய்ய.

(உணங்கல் - வற்றல்)

அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்பவை பெண்ணின் குண நலங்களாம். எழில் நடை பயிலும் அன்னத்தை மடவன்னம் என்பர் புலவர். எனினும் அறிவில்லா (மடைமை) (மட) அன்னமாகிவிடாதே என்று தலைவன் அதற்கு அறிவுரை வழங்குகின்றுன்.

சேரன் மடவன்னம் சேர னடையொவ்வாய்
சேரன் மடவன்னஞ் சேர னடையொவ்வாய்
வார்திரைநீர் வேலி யுழக்கித் திரிவாள் பின்
சேரன் மடவன்னஞ் சேர னடையொவ்வாய்.

'சேரல் (சேராதே)! மடவன்னமே. தலைவிபக்கம் தாளைச் செலுத்தாதே. சென்றிடிலோ நீ வெட்கித் திரும்ப நேரிடும். உன்னுடைய நடை அவளுடைய நடையொவ்வாது. பதனம், பதனம்' என்று பின்னுணர்வை முன்கூட்டித் தலைவன் உரைக்கின்றுன். சேரல் என்று ஒன்றுக்கு ஆறுதடவை சொல்லியும் மடவன்னம் (அண்மை விளி) நடையொவ்வாய் என்று மூன்று முறை உரைத்தும், தலைவன் தலைவி நடைபயிலும் அழகை இசைக்கின்றுன். 'தலைவி நெய்தல் நிலப் பெண்தானே. கடல்நீரைக் கலக்கித் திரிவாள் ஓடுதலைக் கண்டு ஏமாந்து விடாதே. அவள் நடையழகு வேறு' என்ற உட்பொருளுடன் தலைவன் அன்னத்துக் குரைக்கின்றுன். இப் பாடலைக் 'காமஞ் சாலா இளமையோள் வயின் ஏமஞ்சாலா இடும்பை யெய்தியோன் சொல்லியது' என்றுரைப்பார் அரும்பதவுரையாசிரியர்.

கோவலன் பாடிய உருக்கள் களவில் தலைமகன் கூற்றுகும். கோவலன் கானல்வரிப் பாடல் கேட்ட மான் விழியாள் மாதவி யாழ்வாங்கி மகிழ்ந்தாள்போற் காட்டி அவளும் கானல்வரிப் பாணி பாடத் தொடங்கினுள். ஆடல், பாடல், அழகு என்ற மூன்று சிறப்புடைய மாதவியும் சிறப்பாகக் காணத் தக்கவளன்றே!

# 'தமிழே வேண்டும்'

[திருமங்கலம் வை. தங்கமணி]

1. விண்முட்ட நிவந்து நிற்கும்
தென்னகக் கோயில் எங்கும்
வண்டமிழ் மொழியால் நாளும்
வழிபடல் வேண்டும்! அன்றி
எண்ணத்தைக் கெடுக்கும் வேற்று
மொழியினுல் பூசித் தென்றல்
என்சுவைக் கனியை விட்டே
எட்டியை நாடற் கொப்பாம்!

2. ஒப்பிலான் இறைவன்; வேதம்
ஓதிய வாயால் சொன்ஞன்;
செப்புக தமிழால் என்னே
சேர்துயர் அகலும் காண்பாய்!
அப்பதம் நல்கும் 'பாவை'
அருளிய நீயே 'கோவை'
இப்பொழு தென்றன் முன்னே
இயம்புக வீடு கொள்வை!

3. கொள்கையில் காஞ்சி வேந்தன்
கொடுமை யால்திருமங் கைதான்
வள்ளலாம் அரங்கன் முன்னிற்
பாடிய பாடல் கேட்டுப்
பொன்னென அன்ஞர் பின்னே
போனதும்; 'படையைக்' கேட்டு
வள்ளியின் கொண்கன் குன்றை
உடைத்ததும் தமிழால் அன்ரே?

4. கேளவன் ஆக; முந்தைக்
கன்மங்கள் போக; தீய
வாளெனும் மலங்கள் நீங்கி
வாலறி வடியைப் பற்ற
யாவரும் புரியும் வண்ணம்
ஏற்புடைத் தாக இங்குத்
தேவனின் திருமுன் சொல்லத்
தென்றமிழ் மொழியே வேண்டும்!

———

# ஆட்சிமொழிச் சிந்தனைகள்

## 14. CYCLOSTYLE

[தமிழ்த் தொண்டர் கோ. முத்துப்பிள்ளை

*மகாகவி பாரதி நகர், சென்னை 600039]*

நன்கு தெரிந்த நான்கு ஆங்கிலச் சொற்கள் இருக்கின்றன. அவை அனைத்திற்கும் ஒரேயொரு மொழிபெயர்ப்பு தான் வழங்கிவருகின்றது. அந்த நான்கு சொற்கள் யாவை, அவற்றிற்கான ஒரே மொழிபெயர்ப்பு என்ன? விடுபுதிர் போடுவதாக எண்ணிச் சினமடைவீர்கள்! காலங்கடத்தாமல் சொற்களை வழங்கிவிடுகின்றேன். ஆம் Cyclostyle, Duplicator, Roneo, Stencil ஆகிய சொற்கள் அணிவகுத்து வருகின்றன! வழங்கிவரும் ஒரேயொரு மொழிபெயர்ப்பு ''படிபெருக்கி'' என்பதாகும்!

Duplicator என்னும் பெயர் பொதுவான ஒரு சொல்லாகும். இதற்குரிய மொழிபெயர்ப்பை அடிப்படையாக அமைத்துக்கொண்டால், அதன்பின்னர் கட்டடத்தை எழுப்புவது கடினமாக இருக்காது!

''கழை'' அல்லது ''மூங்கில்'' என்னும் சொல் எத்தனையோ பொருள்களை நமக்கு அளித்து மகிழ்கின்றது. மூங்கிலைக் கொண்டு படிக்கட்டு அமைக்கின்றோம். ஒவ்வொரு கணுவையும் ஒட்டியபடியாக வெட்டிக்கொண்டுவந்தால், அளக்கும் படிகளை அளித்து மகிழ்கின்றது அந்த மூங்கில். மூங்கிலின் உட்பகுதியில் உள்ள வெண்மை நிற ஏட்டிலிருந்து ஏடு தயாரிக்கிறார்கள்! அந்த ஏட்டிலே செய்திகளை அச்சடித்துப் ''படி, படி'' என்று சொல்லிப் பெரியோர்கள் தொல்லை கொடுக்கின்றார்கள்! ஓர் ஏட்டிலே இருப்பதை இன்னோர் ஏட்டில் பெயர்த்துக்கொடுத்தால் அதற்குப் பெயரும் ''படி'' என்று அமைகின்றது.

''படி'' என்னும் சொல் சொன்னபடியெல்லாம் கேட்கும் நல்லதொரு சொல்லாகும்!

ஒரு படியிலிருந்து பல படிகளை எடுக்க உதவும் பொறிதான் Duplicator. அதற்குரிய அழகிய தமிழ்ப் பெயர் ''படிபெருக்கி'' என்பதேயாகும் என்பதில் தடையில்லை.

இப்போது அடுத்த படியில் ஏறிப்பார்ப்போம்! அதுதான் Cyclostyle என்னும் படியாகும்! தாமசு ஆல்வா எடிசன்

கண்டு பிடித்த முறையாகும் இந்த Cyclostyle. கையெழுத்துப் படி ஒன்றிலிருந்து பல படிகளை எடுத்துக்கொள்ள உதவுவது இந்தப் பொறியாகும். எழுத்தாணி போன்ற கருவியால் எழுத்துக்கள் பொறிக்கப் பெறுகின்றன. கைப்பிடியைக் கையினால் சுற்றும்போது பொறியின் உருளைகள் சுழன்று தேவையான அளவிற்குப் படிகள் எடுக்கப் பெறுகின்றன, ஆகவே இந்த Cyclostyle பொறிக்குக் "கையெழுத்துப் படிபெருக்கி" என்றோ "கைச்சுற்றுப் படிபெருக்கி" என்றோ பெயர் சூட்டுதல் வேண்டும்.

"கைச்சுற்று முறுக்கு" என்று சொல்லிவிட்டால் போதுமானது! பல்லுப்போன கிழவர்கள்கூட "நறுக்கியாவது தின்கின்றேன்" என்று கூறிக் குதித்து எழுவார்கள்! "கைச் சுற்று முறுக்கு" என்னும் இந்தப் பொருள் "கை முறுக்கு" என்னும் சுருக்கமான பெயரை ஏற்றுக்கொண்டுவிட்டது. இதே முறையில் கைச்சுற்றுப் படிபெருக்கியும், காலப்போக்கில், "கைப் படிபெருக்கி" என்னும் பெயரைப் பெற்றுக்கொண்டு விடும் என்று துணிந்து கூறலாம்.

Roneo என்னும் சொல்லிற்கான மொழிபெயர்ப்பை அமைக்கும் முன்னர், அதன் வரலாற்றை அறிந்துகொள்வது மிகவும் வாய்ப்பாக இருக்கும். Rotary என்னும் சொல்லையும் Neostyle என்னும் சொல்லையும் இணைத்து உருவாக்கிய சொல்லே Roneo ஆகும்! முதலாவது சொல்லில் முதல் இரண்டு எழுத்துக்கள் (Ro), இரண்டாவது சொல்லில் முதல் மூன்று எழுத்துக்கள் (Neo) ஆகிய இரண்டையும் இணைத்தால், புதிய சொல் பிறந்துவிடுகின்றதன்றோ? புதிய சொற்களை உருவாக்கும் குறுக்கு வழிகளிலே இஃதொரு சிறந்த வழியாகும்!

சுழலுகின்ற உருளைகள் வழங்குகின்ற படிகளை Roneo எந்திரத்தின் மூலம் பெறுகின்றோம். Roneo எந்திரங்கள் மின் விசையால் இயக்கப்படுவனவாகும். இவற்றில் கையினால் உருட்டப்படும் இணைப்பும் இருக்கத்தான் செய்கின்றது. மையைத் தடவுவதற்கு இந்த ஏற்பாடு உதவுகின்றது. மின்வசதியில்லாத போது, படிகளை எடுப்பதற்கும் இதே ஏற்பாடு பயன்படுகின்றது. ஆயினும் மின்னியக்கமே Roneo எந்திரத்தின் உயிர் நாடியாகும். இப்போது பெயர் பளிச்சிடுகின்றது! ஆம். அதுதான் "மின்னியக்கப் படிபெருக்கி"! நாளடைவில் இது "மின் படிபெருக்கி" என்று கூடச் சுருங்கிப்போகும்.

எண்ணித் தொலையாத எந்திரங்கள் எந்நேரமும் வந்து கொண்டிருக்கின்றன! மொழிபெயர்ப்புகளும் அதைப் போலவே

மின்னல் வேகத்தில் வெளிவரவேண்டுமென்பதே நம் விருப்ப மாகும்.

கடைசியாக நாம் கவனிக்கவேண்டிய சொல் Stencil என்பதாகும். இது Stencil plate என்றோ Stencil paper என்றோ சேர்ந்துதான் வரும். எழுத்துக்கள் வெட்டப்படும் தகடு அல்லது தாள் என்றுதான் இதனைக் குறிக்கவேண்டும். எனவே Stencil என்பது "படிபெருக்கித் தகடு" என்று மாற்றம் பெறும். நான் ஓர் எந்திரத்தை இப்போது பார்த்தேன். அதன் பெயர் Stencil Duplicator என்பதாகும்! எல்லாச் சொற்களையும் ஏற்றவாறு ஆய்ந்துவிட்டோம் என்று எண்ணி நாம் மகிழ்ந்து ஓய்வெடுக்கும்போது, இந்தத் தொடர் நம்மைத் திணர அடிப்பதாக அமைந்து விடுகின்றது. "அஞ்சேல்" என்று அருள்புரிவார் ஆருமில்லை! எனினும் நாம், "தகட்டுப் படிபெருக்கி" என்று சொல்லிவிட்டு ஓட்டம் பிடிக்கலாம்!

தமிழன்பர்கள் மிகுந்த அக்கறையுடன் கவனிக்கவேண்டிய செய்தியை இப்போது கூறவிரும்புகின்றேன். படிபெருக்கியின் எந்திர வகைகளுக்கு மந்திர மொழிபெயர்ப்புகளை நாம் ஆராய்ந்து கண்டுள்ளோம்! ஆயினும் தனிப்பட்ட ஒரு படிபெருக்கியை எடுத்துக்கொண்டால், அதன் பல்வேறு உறுப்புகளுக்கும் பல்வேறு அழகிய ஆங்கிலப் பெயர்கள் அமைந்துள்ளன. இவற்றை Duplicator terms என்று குறிக்கலாம். இத்தகைய நுட்பமான பெயர்களுக்கெல்லாம் அழகிய தமிழ்ப் பெயர்களை அமைப்பதில் நாமெல்லாரும் விரைந்து வினையாற்றுதல் வேண்டுமன்றோ? "சேரவாரும் செந்தமிழ் நாட்டினரே" என்னும் அன்பான அழைப்பை விடுத்துக் கட்டுரையை நிறைவுசெய்கின்றேன்.

Duplicator = படிபெருக்கி.
Cyclostyle = கைப் படிபெருக்கி
Roneo = மின் படிபெருக்கி
Stencil = படிபெருக்கித் தகடு.

———

## வாழ்வாங்கு வாழ்தல்

தாம் மட்டுமல்லாது, பிறரும் உலகத்தில் மகிழ்ச்சியடையக் கூடிய அளவில் வாழ வேண்டும் என்பதைத்தான் நல்வாழ்வு எனக் கருதி, மக்கள் வாழ்வாங்கு வாழ வேண்டும் என்று குறிப்பிடு கிறேன்.

—பேரறிஞர் அண்ணா.

# சங்க நூல்களில் ஞாழல்

[பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

(முன் இதழ் ௬-௪௦ஆம் பக்கத் தொடர்ச்சி)

**வளரும் இடம் :**

ஞாழல் மரமானது கடற்கரையோரங்களில் சதுப்பு நிலத்தில் காணப்படும் மரமாகும். இது உப்பு நீர் சூழ்ந்த கடற்கரையை யொட்டிய காடுகளில் (Mongrove forests) மிகுதியாகக் காணப்படும். உப்பு மிகுந்த சதுப்பு நிலக் காடுகளில் நன்கு வளரும் மரங்களில் ஞாழல் மரமும் ஒன்றாகும். புன்னை, தாழை, கண்டல், தில்லை முதலிய மரங்கள் கடற்கரை சதுப்புநிலக் காடுகளில் (Mongrove forests) மிகுதியாகக் காணப்படும். இன்றும், சிதம்பரத்தையடுத்துள்ள பிச்சாவரக் கடற்கரைக் காடுகளில் இந்த மரங்களைக் காணலாம். கடற்கரைச் சதுப்புநிலக் காடுகள் மிகுதியும் அழிக்கப்பட்டதால் இப்பொழுது ஞாழல் மரத்தைக் காண்பது அரிதாக இருக்கின்றது.

'ஊர்க்கால் நிவந்த பொதும்பரிலும்' (கலி. 56), 'பெருங்கடல் வரிமணலிலும்' (கலி. 127), 'வயங்கொளி எக்கர் கொண்ட கானலிலும்' (கலி. 131) ஞாழல் மரங்கள் உள்ளதைக் கலித்தொகை கூறியுள்ளது. 'மாநீர்த்திரை பூம்பொழிலில்' (தி. மொ. ஐ—49) ஞாழல் மரம் இருந்ததைத் திணைமாலை நூற்றைம்பது கூறியுள்ளது. 'கழிக்கானலிலும்' (தி.மா.நூ.39), 'கடற்றுறையில் உயர்ந்த தாழ்பொழிலிலும்' (தி. மா, நூ. 44), 'மறி கடலும் கானலும் சேர் வெண்மணலிலும்' (தி. மா. நூ. 58) ஞாழல் காணப்பட்டதாக திணைமாலை நூற்றைம்பது கூறியுள்ளது. 'கரைகெழு பெருந்துறையிலும்' (பதிற். 30), 'கடல்சேர் கானலிலும்' (பதிற், 51) ஞாழல் காணப்பட்டதைப் பதிற்றுப்பத்து கூறியுள்ளது. 'விரைமர முருட்டுந் திரையுலாப் பரப்பில்' ஞாழல் காணப்பட்டதாக மணிமேகலை (8-6) கூறியுள்ளது.

ஞாழலின் சிறிய பூவும், மருதின் சிவந்த பூவும் காய்ந்து விழுந்து துறைக்கு அணி செய்ததைக் குறுந்தொகை (50) கூறியுள்ளது. 'தண்ணந்துறையிலும்' (குறுந். 310), 'எறி சுருக் கலித்த விலங்கு நீர்ப் பரப்பிலும்' (குறுந். 318), 'கடற்கரைத் துறையிலும்' (குறுந்328), 'ஊதை தூற்றும் உரவு நீரிலும்' (குறுந்.397) ஞாழல் காணப்பட்டதைக் குறுந்தொகை கூறியுள்ளது. 'கொடுங்கழியிலும்' (அகம். 20), 'கானலம் பெருந்துறையிலும்' (அகம். 70), 'புலவு நாறிருங் கழியிலும்' (அகம். 180), 'தண்டுறை ஊரன்

கழனியிலும்' (அகம். 216), 'நளி கடற் கானலிலும்' (அகம். 240), 'இருங்கழியிலும்' (அகம். 270) ஞாழல் காணப்பட்டதை அகநானூறு கூறியுள்ளது. 'எக்கர் ஞாழல்' என்றே ஐங்குறு நூற்றில் பத்துப் பாடல்கள் துவங்குகின்றன. 'பெருங் கடற்கரையிலும்' (ஐங். 169), 'கானலிலும்' (ஐங். 191) ஞாழல் இருந்ததாக ஐங்குறுநூறு கூறியுள்ளது. 'பனிக்கழித்துறை' யிலும் (நற். 31) 'கடற்கரை தெண்டிரையிலும்' (நற். 54), 'பெருங்கடல் அருகிலும்' (நற். 74), 'புதுவது புணர்ந்த பொழி லிலும்' (நற். 96), 'மணங்கமழ் கானலிலும்' (நற். 167), 'இன்ன மர் கானலிலும்' (நற். 267), 'கடல் துறைக் கானலிலும்' (நற். 311), 'கடற்கரைத் துறையிலும்' (நற். 315) ஞாழல் வாழ்ந்ததை நற்றிணை கூறியுள்ளது. ஞாழல் கடற்கரைச் சதுப்பு நிலத்தில் காணப்படுவதை மிகத்தெளிவாக மணிமேகலை கூறியுள்ளது. 'திரையுலாப் பரப்பின் தாழ்கண் அசும்பில்' ஞாழல் ஓங்கி வளர்ந்த தாக மணிமேகலையில் கூறப்பட்டுள்ளது. தாழ்கண் அசும்பு என்பது நீர் ஊறும் தாழ்ந்த நிலத்தையே குறிக்கும்.

இவ்வாறு பல பாடல்களில் கடற்கரைத் துறையிலும், கானலிலும், கானற் பொழிலிலும்—அசும்பிலும் ஞாழல் இருப்ப தாகக் குறிக்கப்பட்டு இருப்பதால் ஞாழல் மரம் எதுவென்ப தைச் செடிநூலறிவொடு ஆராய்ந்து பார்த்தால் கண்டு கொள்ளலாம். இம் மரம் வாழுமிடச் செய்தியிலிருந்தும் இலை, பூ முதலியவைகளைப்பற்றிக் கூறிய செய்திகளிலி ருந்தும் ஞாழல் மரம் எதுவென்பதை உறுதியாக அறுதி யிட்டுக் கூறலாம். கானலிலும், கடற்கரைச் சூழலிலும், கானற் சோலையிலும் ஞாழலொடு புன்னை, புன்கு, அடும்பு, செருந்தி, தாழை, கண்டல் ஆகியவை கூறப்பட்டிருப்பதை உன்னிப்பாகக் கவனிக்க வேண்டும். இந்த மரங்களெல்லாம் நெய் தல் நிலத்திலே கடற்கரைக் காடுகளில் காணப்படுவனவாகும். நற்றிணை 54ஆவது பாடலில் கூறப்பட்ட கண்டல் கடற்கரைச் சதுப்புநிலக் காடுகளிலே மட்டும் காணப்படும் மரமாகும். கண்டலை typical mongrove tree என்று கூறலாம். இன்றும் பிச்சாவரக் காடுகளில் காய்க் கண்டல், வெண் கண்டல், கருப்புக் கண்டல் முதலிய கண்டல் மரத்தின் வகைகளைக் கூறுவர். ஞாழல் மரம் கடற்கரைக் காடுகளில் (coastal forest of India) காணப்படும் என்று செடி நூலார் கூறியுள்ளனர்.

அடிமரமும் இலையும் :

சீவக சிந்தாமணி (515) 'பொரியரை ஞாழல்' என்று கூறி யுள்ளது. அடிமரப்பட்டை பொளிந்தும், பொரிந்தும் காணப்

பட்டதாகக் கூறிய செய்தி உண்மையேயாகும். செடி நூலாரும் bark longtitudinally furrowed என்று கூறியிருப்பதைக் காண லாம். ஞாழல் மரம் ஓரளவு உயரமாகவும், பெரிதாகவும் (attaining considerable size) வளரக் கூடியது. ஞாழல், ஓங்கு சினையில், அதாவது, கிளையில் தாழை மரத்தின் வீழ்களால் ஆன கயிற்று ஊஞ்சலில் மகளிர் விளையாடுவதை அகநானூறு (20) கூறியுள்ளது. கலித்தொகையில், (56) 'ஊர்க்கால் சிவந்த (உயரிய) ஞாழல் என்று கூறப்பட்டுள்ளது.

'எக்கர் ஞாழல் இகந்துபடு பெருஞ்சினை' என்று ஞாழலின் உயரமான கிளைகளை ஐங்குறுநூறு (148) கூறியுள்ளது. 'ஞாழல் ஓங்கிய தாழ்கண் அசும்பு' என்று மணிமேகலை (8-6) கூறுவதும் கவனிக்கத்தக்கதாகும். 'எக்கர் ஞாழல் நறுமலர் பெருஞ்சினை' என்று ஐங்குறுநூறு (150) ஞாழலின் பெரிய கிளைகளைப்பற்றிக் கூறியிருப்பதையும் கவனிக்க வேண்டும். ஞாழலின் கிளைகளைக் 'கருங்கோட்டிருஞ்சினை' என்று அகநானூறு (240) கூறியிருப் பதும் உண்மையே. மற்றும் 'ஏனோன்போல் நிறம் கிளர்பு களுலிய ஞாழலும்' என்று கலித்தொகையும் (26) இந்த மரத்தின் கரிய நிறத்தைப்பற்றிக் கூறியுள்ளது.

ஞாழலின் இலை அழகாக இருக்கும். இலைகள் முட்டை வடிவில், மேலே வழவழப்பாகவும், கீழே வெள்ளி போன்ற நிற முடைய நுண்ணிய சுனைகளுடனும் மெத்தென்று காணப்படும். செடி நூலில் இதன் இலையைக் குறித்து 'Leaves elliptic oblong cariaceous, glabrous above, entirely covered beneath with minute silvery scales' என்று கூறப்பட்டுள்ளது. ஞாழல் இலையின் கீழ்ப்பாகம் வெள்ளியைப்போல், பளபளவென்று வெண்மையாக இருப்பதால் ஞாழல் மரத்தைக் 'கண்ணாடி இலை' என்று இக் காலத்தில் அழைக்கின்றனர்.

'ஞாழற் சிறியிலைப் பெருஞ்சினை' என்று ஐங்குறுநூறு (145) ஞாழல் மரத்தின் பெரிய கிளைகளில் சிறிய இலைகள் இருப்பதைக் குறிப்பிட்டுள்ளது. ஞாழலின் இலைகள் இரண்டு முதல் நான்கு அங்குலம் நீளம் வரை இருக்கும். ஞாழல் மலர்க் கொத்தை மகளிர் கூந்தலில் வைத்து வாரி முடித்துக் கொள்ளும் பழக்கம் இருந்ததாகக் கலித்தொகை (56) கூறும். 'கொழுநிழல் ஞாழல் முதிரிணர் கொண்டு கழும முடித்து' என்னும் செய்தியிலிருந்து அறியலாம். ஞாழலின் இலைகளைக் கொய்வது பற்றி சங்கப் பாடல்களில் கூறப்பட்டுள்ளது. 'கடலாடு மகளிர் கொய்த ஞாழலும்' என்று அகநானூறு (216) கூறியுள்ளது. 'கொய்குழை அரும்பிய குமரி ஞாழல்' என்று மகளிர் ஞாழலின் மெல்லிய தனிச்

களைக் கொய்யும் பழக்கத்தை நற்றிணை (54) கூறியுள்ளது. ஞாழல் இலைக் கொழுந்துகளைப் பறித்து தலைவி கையால் தேய்ப்பதைப் பற்றி நற்றிணை (106) 'முறிதிமிர்ந்து உதிர்த்த கையள்' என்று கூறியுள்ளது.

ஞாழல் பூவைப்பற்றிப் பல பாடல்கள் கூறுகின்றன. ஞாழல் பூ கொத்தாகப் பூக்கும் என்பதை 'இணர்' என்று பல பாடல்களில் கூறப்பட்டிருப்பதிலிருந்து தெரிந்து கொள்ளலாம். கலித்தொகை, 'முதிர் இணர்', (56) என்றும் 'தெரியிணர்' (127) என்றும் கூறியுள்ளது. 'இணர்ததை ஞாழல்' (பதிற். 30-1) என்றும் 'குவியிணர் ஞாழல்' (பதிற். 51-5) என்றும் பதிற்றுப்பத்து கூறியுள்ளது. ஐங்குறுநூறு, 'ஞாழலிணர்' (144) 'பொன்னிணர்' (169) என்று கூறியுள்ளது. ஞாழல் கொத்து panicles என்று செடிநூலில் கூறப்பட்டுள்ளது. கொத்தாகப் பூக்கும் ஞாழலின் இணர் தொங்கிக்கொண்டு இருக்கும். Drooping panicles என்று கூறுவர். இதையே 'தாழிணர்' என்று நற்றிணை(106)யும், 'ஞாழல் இறங்கிணர்' என்று ஐங்குறுநூறும் (142) பொருத்தமாகக் கூறியுள்ளன. ஞாழலின் மொக்கு 'நனை ஞாழல்' என்று பொருநராற்றுப்படையில் (197.ம் வரி) குறிப்பிடப்பட்டுள்ளது. ஞாழலின் பூக்கள் செம்மஞ்சள் நிறமும், மஞ்சள் நிறமும் கலந்து காணப்படும். 'ஐயவியன்ன சிறுவீ ஞாழல்' என்று குறுந்தொகை (50-1) கூறியுள்ளது. நற்றிணையில் நெய்தல் திணைக்குரிய ஐந்து பாடல்களிலும் (31, 74, 191, 311, 315) 'சிறுவீ ஞாழல்' என்று கூறப்பட்டுள்ளதைக் காணலாம்.

செடிநூலார் ஞாழலின் பூவைச் சிறியது (Flowers small) என்று கூறியுள்ளனர். 'நனைமுதிர் ஞாழல் சினைமருள் திரள்வீ' என்று குறுந்தொகை (397) கூறியுள்ளது. அரும்புகள் முதிர்ந்த ஞாழலினது மலர் மீன் முட்டையைப் போன்று திரண்டு இருப்பதாகக் கூறியிருப்பதும் கவனிக்கத் தக்கதாகும். 'பொன்வீ ஞாழல்' (அகம். 70), 'செவ்வீ ஞாழல' (அகம். 240), 'பொன்னிணர் ஞாழல்' (ஐங். 169) என்று ஞாழலின் பூவின் நிறத்தைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. ஞாழற்பூ மஞ்சள் கலந்த செம்மஞ்சள் நிறமாக (Orange-yellow) இருக்கும் என்று அறிவியலார் கூறுவர். இதைச் 'செவ்வீ' என்று கூறியதும் ஒருவகைச் சிவப்பு நிறத்தோடு இருத்தலால் ஆகும். பொன்னிறமான பூ என்பதையும் கவனிக்க வேண்டும். 'கானல் கமழ் ஞாழல் வீயேய்ப்பத் தோழியென் மேனி சிதைத்தான்' என்று கலித்தொகை (131) கூறுமிடத்தில் தலைவியின் மேனி பசலையுறுவதற்கு ஞாழல் பூவின் நிறத்தை ஒப்பிட்டிருப்பதைக் காணலாம்.

தலைவியின் மேனிச் சுணங்கிற்கு நிறவொப்புமை காரணமாக ஞாழல் பூவை உவமையாகக் கூறியதைக் காணலாம். 'சிறுவீ ஞாழல்......சுணங்கின் ஐதுபடத் தாஅங்கு' என்று நற்றிணையும் (191), 'எக்கர் ஞாழற் பூவின் அன்ன சுணங்குவளரிள முலை' என்று ஐங்குறுநூறும் (149) கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். ஞாழல்மரம் இளவேனிலில் பூக்கும் என்பதும் உண்மையாகும்.

சங்கப் புலவர்கள் நெய்தலுக்குரிய மரமாக ஞாழலைக் கூறியதன் நுண்மாண் நுழைபுலத்தை நன்கு அறியலாம். ஞாழல் மரம் நெய்தல் நிலத்தில்தான் காணப்படும். அதிலும் உப்பு நிறைந்த கடற்கரைக் காடுகளில்தான் காணப்படும். ஞாழல் மரத்தை வடநாட்டு மொழிகளில் 'சுந்திரி' (Sundri) என்றழைப்பர். கங்கையாறும், பிரம்மபுத்திராவும் கடலில் கலக்கும் உப்புநீர் முகத்துவாரத்தில் ஞாழல்மரம் பல ஏக்கர்கள் பரப்பில் காடாகக் காணப்படுகின்றது. இங்கு உப்புநீர் தங்கும் இடத்தில் ஞாழல் மரங்களே மிகுந்து காணப்பட்டதால் அக் காடுகள் 'சுந்தர வனக் காடுகள்' (Sundarbans) என்றழைக்கப் பட்டது. இந்தியாவில் இருந்த பலவகைக் காடுகளில் ஞாழல் காடு தனியாகப் பிரித்துக் கூறப்பட்டுள்ளது. ஞாழல் மரம் மிகுந்திருந்ததால் 'ஞாழல் பூம்பொழில்' என்று திணைமொழி ஐம்பது (49) கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும்.

ஞாழல்மரம் பூத்திருக்கும்போது பார்ப்பதற்கு அழகாக இருக்கும். இதன் இலைகளும், பூவும் அழகாக இருக்கும். இந்த அழகின் காரணமாக 'கன்னி இளஞாழல்' என்று திணைமொழி ஐம்பதும் (49), 'இள ஞாழல்' என்று திணைமாலை நூற்றைம்பதும் (39 ) குமரி ஞாழல் என்று நற்றிணையும் (54) கூறியுள்ளதைக் கவனிக்கவேண்டும். ஞாழல் மரம் மிகவும் அழகாயிருப்பதைக் குறித்தே 'Evergreen ornamental tree' என்று செடிநூலில் சொல்லப்பட்டுள்ளது. இந்த மரம் நேராக வளராது. யாப்பருங்கல விருத்தியுரையில் கடற் கரையில் இருந்த ஒரு மரத்தை, 'இடவ, குடவ, தடவ' என்று வளைந்து, திரிந்து, பெரிதாகக் காணப்படும் என்று கூறியுள்ளதைக் காணலாம். அது ஞாழலாகவே இருக்கலாம்.

''ஞாழலென்பது ஒருவகைக் குங்குமம், ஒருவகைக் கொன்றை, கோங்கு, பலினி முதலிய பல மரங்கட்குப் பெயராமாயினும் நெய்தற் கருப்பொருளில் அது பலினியையே குறித்து வருமென்ப; பலினி என்பது வடமொழிச் சிதைவு'' என்று உரையாசிரியர் அனந்தராமய்யர் கலித்தொகைப் பாடலுக்கு (127) அடிக்குறிப்புரை எழுதியுள்ளது சிறந்த உரையாகும். வடமொழி

இலக்கியங்களில் ஞாழல் மரம் பலினி என்றே கூறப்பட்டுள்ளது. குங்குமம், கொன்றை, கோங்கு என்ற பெயர்கள் ஞாழலைக் குறிக்கமாட்டா. ஏனெனில் அவை வெவ்வேறு மரங்களாகும். திவாகரம், பிங்கலந்தை, சூடாமணி ஆகிய நிகண்டுகள் ஞாழலை பலினி என்று கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். இந்த வடமொழிப் பெயரே ஞாழலைக் கண்டுகொள்ள உதவும். ஞாழலை, புலிநகக் கொன்றை என்றும் சிலர் கூறுவர்.

சங்க நூல்களில் அகநானூறு 33, 144, 174, 314, 344, 353, குறுந்தொகை 182 215, நற்றிணை 82, 297, 321, புறநானூறு 388 ஆகிய பாடல்களை 'மதுரை அளக்கர் ஞாழார்மகனார் மள்ளனார்' என்ற புலவர் இயற்றியதாக நூற்பதிப்புக்களில் உள்ளது. அளக்கர் என்ற சொல்லுக்கு உப்பளம், சேறு என்ற பொருள்களை பிங்கலந்தை நிகண்டு குறிப்பிட்டுள்ளது. ஞாழல் மரமானது உப்பளச் சூழ்நிலையிலும் கடலோரத்து சேற்றுக் காடுகளிலும் வளரும்.

ஆதலின் மேற்சொன்ன பாடல்களை எழுதியவர் 'அளக்கர் ஞாழலார்' என்று இருத்தல் வேண்டும். இப்போதைய நூல்களில் கூறப்படும் 'அளக்கர் ஞாழார்' என்ற பெயர் பொருளற்றதாகும். இந்தப் புலவர் பெயர் அளக்கர் ஞாழல் என்று அடைமொழியோடு பாடிய சொற்களால் பெயர் பெற்றிருக்க வேண்டும். மற்றும் 'அளக்கர் ஞாழல்' என்ற தொடர் இப் புலவர் பாடிய பாடல்களில் இருந்திருக்க வேண்டும். சங்க நூல்களைத் தொகுக்கும்போது இப் பாடல் விடப்பட்டு இருக்கலாம்.

ஞாழல் மரம் இன்று கேரளக் கடற்கரையில் நிறையக் காணப்படுகின்றது. சங்க காலத்தில் கேரளம் தமிழகத்தின் ஒரு பகுதியாக இருந்ததால் சங்கப் புலவர்கள் ஞாழலைக் கண்டு பாடினர் என்று தெரிகின்றது. ஞாழலை ஆங்கிலத்தில் 'sundri' என்றும், அறிவியலில் Heritiera Littoralis (Dryand) என்றும் கூறுவர்.

---

## ஏற்புடைய மருந்து

[நாகை. வேலன்]

ஏற்றமுள்ள தமிழ்மொழியைப் போற்றுதார் இல்லை
　　எனினுமந்த ஏற்றத்தின் இடையேயும் சிலபேர்கள்
ஏற்றமிலா வடமொழியை வாழ்விக்க எண்ணி
　　எந்நாளும் இழைக்கின்றார் எல்லையிலாத் தொல்லை
ஏடுகளோ இவர்கட்கு எடுப்பார்கைப் பிள்ளை!
　　இந்நிலையை மாற்றுதற்கு இனமானம் ஒன்றே
ஏற்புடைய மருந்தாகும் என உணர்தல் வேண்டும்
　　இம்மாற்றம் இல்லையெனில் ஏமாற்றம் நமக்கே!

# கோச்செங்கணான் யார்?

[ டாக்டர் இரா. கலைக்கோவன், M.B.B.S.. D.O. ]

(முன்னிதழ் ௩௪௬ ஆம் பக்கத் தொடர்ச்சி)

இரண்டாவது, சோழனின் முற்பிறப்புச் சிலந்திக் கதை. அப்பரும் சம்பந்தரும் பாடிய கதையைச் சேக்கிழார் பெருமானும் தொடர்ந்து பாடியிருக்கிறார். இதன் உண்மைபற்றி ஆய்வது தேவையற்றது. ஏனெனில் இதுபோன்ற புராணக் கதைகள் நம் நாட்டில் பல்லாற்றானும் பெருகியுள்ளன. இவை புலவர் களின் கற்பனையில் எழுந்தவை என்பதினும் வேறு சொல்வதற் கில்லை.

அப்படியே இந்தக் கதை நடந்ததாகக் கொண்டாலும், அது பொருந்துவதாக இல்லை. சிவபெருமானின் திருமுடிமீது அங்குள்ள கானல் மரங்களின் சருகுகள் உதிராமல் காக்கத் தன் வாய் நூலால் வலை பின்னிய சிவஞானச் சிலந்தி, சோழனாய்ப் பிறந்ததும் திருமாலுக்குக் கோயில்கள் எடுப்பித்தது எங்ஙனம்? 'சிவபெருமானுக்கு எழுபது கோயில்கள் எடுத்ததாகத் திருமங்கை யாழ்வாரே பாடியுள்ளார்', என்கிறார்களே, அத் திருமங்கை யாழ்வார் ஏனிந்த மன்னனின் சிலந்திக் கதையைச் சொல்லாமல் விட்டார்? சிவனுக்குக் கோயில்கள் எடுத்ததைப் பெருந்தன்மை யுடன் சொன்னதாகச் சொல்லப்படும் ஆழ்வார் பெருமான் சிலந்திக் கதையை அது நடந்ததாக நினைத்திருப்பின் கூறாது விடார். சிவனைப் பழிக்கும் இடங்களில்கூட, சிவபெருமான் தொடர்பான புராணக் கதைகளை ஆழ்வார் குறிப்பிடுவது இங்கு எண்ணத்தக்கது. சிலந்திக் கதை உண்மையாக இருந்திருப்பின் தற்போது சில இடங்களில் சிலருக்கு முற்பிறப்பு நினைவு வந்த தாகச் செய்தியிதழ்களில் படிப்பதுபோல், கோச்செங்கணானுக்கும் முற்பிறப்புச் சிலந்தி வாழ்வு நினைவு வந்தது உண்மையாய் இருந்திருப்பின் அதைத் திருமங்கையாழ்வாரும் கூறியிருப்பார். ஏனென்றால், கோச்செங்கட் சோழனைப்பற்றிய பல வரலாற்று உண்மைகளைத் தரும் ஒரே புலவர் அவர்தாம். கோச்செங்கட் சோழன் வெற்றியைப் பாடிய களவழிகூட தராத செய்திகள் பலவற்றைப் பெரிய திருமொழியின் திருநறையூர்ப் பதிகம் தரு கின்றது. இவற்றையெல்லாம் நோக்க, கோச்செங்கணானின் சிலந்திக் கதை. அப்பர் அடிகள், சம்பந்தர் காலத்தில் நாட்டில் வழங்கி வந்திருக்க வேண்டும்; அதை அடியவர்கள் வாயிலாகக் கேள்வியுற்ற அப் பெருமக்கள் தத்தம் பதிகங்களில்

இணைத்திருக்க வேண்டும் என்று கொள்வதே பொருந்தும். திருமங்கையாழ்வார் கோச்செங்கணனைத் திருமால் அடியவனாகக் கண்டமையால் அவர் அக் கதையை ஏற்றாரில்லை.

சோழன் கோச்செங்கணான், திருவானைக்கோயில் முதலிய பல சிவாலயங்களை எழுப்பியது திருத்தொண்டர் புராணத்தால் அறியப்படும் மூன்றாவது செய்தி. கோச்செங்கணான் கோயில்கள் எழுப்பியதை முதன் முதல் தெரிவிக்கும் பெருமான் திருமங்கையாழ்வார்தாம். அப்பர் தம் அடைவுத் திருத்தாண்டகத்தில் சிவபெருமானுக்கென்று பெருந்திருக்கோயில்கள் எழுபத்தெட்டு இருந்ததாகக் குறிப்பினும் அவை யாரால் கட்டப்பட்டன என்று குறித்தாரில்லை. அதே காலத்தில் வாழ்ந்து கோச்செங்கணனைப் பாடிய சம்பந்தர், திருவைகல், திருவானைக்கா, திருஅம்பர், திருமுக்கீச்சரம் முதலிய கோயில்களைப் பாடும்போது அக் கோயில்களைச் செய்வித்தவன் கோச்செங்கணனே என்று பாடுகின்றாரே தவிர, கோச்செங்கணான் எழுபது மாடக்கோயில்கள் எடுப்பித்த பெருமிதச் செய்தியைக் குறிப்பாகவேனும் ஓரிடத்திலேனும் உணர்த்தினாரில்லை. திருநறையூர் மாடக்கோயிலைப் பாடிய திருமங்கையாழ்வாரோ இதற்கு மாறாகக் கோச்செங்கணானுக்கென்றே பத்துப் பாசுரங்கள், மொத்தம் நாற்பது வரிகள் பாடியுள்ளார். கோச்செங்கணான் சிவபக்தியுடைய அடியாராய் இருந்திருப்பானேயானால் அவனைத் திருமங்கையாழ்வார் இவ்வளவு கொண்டாடிப் பாடியிரார். பரமேச்சுர விண்ணகரத்தைப் பாடுகையில், பரம பாகவதனான பல்லவனைக் குறிக்கும்போதுகூட, பல வரலாற்றுச் செய்திகளை வரையாது வழங்கும் திருமங்கையாழ்வார், இவ்வளவு பெருமையுடன் போற்றவில்லை.

> "படைத்திறல் பல்லவர் கோன் பணிந்த
> பரமேச் சுரவிண் ணகரம் அதுவே"[73]

என்றுதான் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் குறிக்கின்றார். ஆனால் கோச்செங்கணனைப் பாடும்போது,

> "செம்பியன்கோச் செங்கணான் சேர்ந்த கோயில்
> திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே,"[74]

என்று கோச்செங்கணான் சேர்ந்த கோயிலுக்கு அனைவரும் வந்து சேருங்கள் என்று பெருவிருப்போடு அழைக்கின்றார். இதை நோக்கும்போது, இப் பாசுரத்திற்குப் பெரியவாச்சான் பிள்ளையவர்கள் செய்துள்ள விளக்கம் குறித்துப் பேராசிரியர் மு. இராக

73. பெரிய திருமொழி, பரமேச்சுர விண்ணகரம், பக். 50, செய்யுள் எண். 8.

ஸவயங்கார் அவர்கள் தம் 'ஆழ்வார்கள் காலநிலை' நூலில் குறிப்பிட்டிருப்பது எண்ணத்தகுந்தது. "சிவத்தொண்டினைச் சிறப்பப் புரிந்த இச் சோழன் முடிவில் திருநறையூர்த் திருமாலுக்கு அடியவனாய்ச் சிறப்புற்றான் என்று திருமங்கை மன்னன் பாசுரப் போக்குக்கு ஏற்பக் கருத்துரைப்பர் முன்னோர்" (ஸ்ரீ பெரிய வாச்சான் பிள்ளை முதலியோர் வியாக்கியானம் காண்க.[75]

ஓர் கோயிலை எழுப்புவதென்பதே மிகக் கடினமான, அதே சமயம், பெருமைக்குரிய செயலாகும். இராசராசன், இராசேந்திரன் போன்ற சோழமன்னர்கள் தாங்கள் எழுப்பிய ஒரே கோயிலால், தமிழகத்துக் கலைவரலாற்றில் அழியாத இடம் பெற்றார்கள். அப்படியிருக்க எழுபது கோயில்களைக் காவிரியின் இருமருங்கிலும் ஒரு மன்னன் கட்டினான் என்றால் அது எத்தனை பெரிய செயல்! அத்தனை கோயில்களையும் அப்பெரு வேந்தன் சிவபெருமானுக்கே எழுப்பி, அவனும் சைவநெறி ஒழுகியவனாக இருந்திருப்பின், சம்பந்தரும், அப்பரும், சுந்தரரும் அதனைக் கொண்டாடியன்றோ பாடியிருப்பர்? கோச்செங்கணான் தில்லையில் சமயத் தொண்டு செய்தவன் என்று சேக்கிழார் கூறுகிறார். ஆனால் இதைப்பற்றி அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகியோருள் எவரும் தில்லையைப்பற்றிப் பாடும் எந்த இடத்திலும் குறிப்பிடவில்லை. இதைப்பற்றி முதன் முதல் குறிப்பு காட்டுபவர் நம்பியாண்டார் நம்பியே.

"வம்பு மலர்த் தில்லை ஈசனைச்
சூழ மறைவளர்த் தான்;"[76]

இதையேதான் சேக்கிழார் பெருமானும்,

"திருவார்ந்த செம்பொன்னின் அம்பலத்தே நடஞ்செய்யும்
பெருமானை அடிவணங்கிப் பேரன்பு தலைசிறப்ப
உருகாவின் றுளங்களிப்பத் தொழுதேத்தி உறையுநாள்
வருவாய்மை மறையவர்க்கு மாளிகைகள் பலசமைத்தார்"[77]

என்று கூறுகின்றார்.

---

74. பெரிய திருமொழி—திருநறையூர்ப்பதிகம்-3, பக். 144. செய்யுள் எண். 1.

75. ஆழ்வார்கள் காலநிலை—மு. இராகவையங்கார், பக். 127.

76. திருத்தொண்டர் திருவந்தாதி—நம்பியாண்டார் நம்பி, பக். 362, செய்யுள் எண் 82.

77. திருத்தொண்டர் புராணம்—கோச்செங்கட் சோழ நாயனார் புராணம், செய். 4212.

முதலில் சமணர்களாய் இருந்து பிறகு சைவர்களான மகேந்திரவர்மப் பல்லவன், பாண்டியன் நெடுமாறன்போல் இக் கோச்செங்கட் சோழனும் முதலில் சைவனாய் இருந்து பிறகு திருமால் அடியவனாக மாறியிருக்கலாம் என்று பெரியவாச்சான் பிள்ளையவர்களின் வியாக்கியானத்தை அடியொட்டி வாதிடலாம். என்றாலும், கோச்செங்கட் சோழன் சமயப் பொறையுடைய மன்னனாக இருந்தான் என்பதே பொருந்தும். சைவமும் வைணவமும் தன் இரு கண்களாய்க் கொண்டிருந்தமையால் தான் அப் பெருமானைச் சைவர்களும் போற்றினர், வைணவர் களும் வாழ்த்தினர். சமயப் பொறையுடன், நடுவுநிலைமை தவறாது, எல்லாச் சமயத்தினர்க்கும் உரியவனாய் நல்லாட்சி செய்து வாழ்ந்த இப் பெருமானை, ஒரு சமயத்துக்கு உரியவ னாக்கி, 'நாயன்மார்'களுள் ஒருவனாகச் செய்தமை, கோச்செங்கட் சோழன்மீது சைவர்களுக்கிருந்த அளவற்ற ஈடுபாட்டையும் அன்பையும் காட்டுவதே தவிர வேறில்லை. அவனைத் திருமால் அடியவனாக வைணவர்கள் பாராட்டுவதும் அதனாலேதான். இரு சமயத்தார்க்கும் இன்பமூட்டியவனாய் இரு கடவுளர்களையும் வணங்கி 'அரியும் சிவனும் ஒன்று' என்ற உயரிய கொள்கைக்கு நிலைக்களனாய் வாழ்ந்தவன் கோச்செங்கணான்.

**முடிவுரை**

கோச்செங்கட் சோழன் தொடர்பான அனைத்து இலக்கியக் கல்வெட்டுச் செய்திகளை ஆராயுமிடத்து, கோச்செங்கட் சோழன் கி. பி. 400இல் இருந்து 600க்குள்ளாக இடைப்பட்டதொரு காலத்தில் வாழ்ந்திருக்க வேண்டுமென்பதும், அப் பெருமான் அழுந்தை, வெண்ணி, கழுமலம் முதலிய இடங்களில் போரிட்டுப் பகையரசர்களை வென்றவன் என்பதும், அவனுடன் கழுமலத்தில் போரிட்ட சேரவேந்தன் போர்க்களத்தில் மடிந்துபட்டான் என்ப தும், அக் கழுமல வெற்றியைக் குறித்துப் பாடப்பட்டதே பொய் கையாரின் களவழி நாற்பது என்பதும், செங்கணான் மாடக் கோயில்களைச் சிவபெருமானுக்கும் திருமாலுக்குமாய் எழுப்பி இரு சமயத்தையும் தன்னிரு கண்களெனப் போற்றி வாழ்ந்த பெரு மன்னன் என்பதும் தெளிவாகக் காணக்கிடக்கின்றன.

———

ஏன்?

தெற்கோதும் தேவாரம் திருவாய்மொ
மொழியான தேனிருக்கச்
செக்காடும் இரைச்சலென வேதபா
ராயணமேன் திருக்கோ யில்பால்.

—புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்

# ஆவிக்குளம்

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

தில்லையிலிருந்து சென்னை வந்துள்ள இளம் பொறியாளர் திரு. சோமசுந்தரம், தில்லை தெற்குக் கோபுர வாயிலையடுத்த திருக்குளத்தை உள்ளூர் மக்கள் ஆயிக்குளம் என்று வழங்குவதாகவும், பழங்காலத்தில் அக்குளமிருந்த இடத்தில் மட்பாண்டத் தொழிலாளர் சூளை வைத்திருந்ததாக நிலவும் செவிவழிச் செய்தியையும் கூறினார். இந்தியமொழிகள் பலவற்றிலும், குறிப்பாக வடபுலமொழிகளில் மட்பாண்டத் தொழிலாளர்களின் சூளை 'ஆவி' என்றே குறிக்கப்படுவது என் நினைவுக்கு வந்தது. வேகும் தொழிலை முழுதும் ஏற்காமல் வெப்பமுறுதல் மட்டும் ஏற்கும் சலவைத் தொழிலாளர் அழுக்குத்துணி வேகவைக்கும் அடுப்பு 'வெள்ளாவி' (வெள், வெறுமை, இன்மை) எனப்படுதலை ஒப்பு நோக்குக, (கருங்களமர்—வயலில் உழைக்கும் வேளாளர். வெண்களமர்—உழுதுவித்துண்ணும் வேளாளர். வெண்மை—செயற்பாடின்மை).

பனிமலை முதல் தென்னங்குமரி வரை ஒரு மொழிவைத்து உலகாண்ட சேரன் காலத்திற்கு முன்பிருந்தே சிந்துவெளி தமிழர் நாகரிகம் இந்தியா முழுவதும் பரந்திருந்ததால் அடிப்படைச் சொற்கள் எண்ணிறந்தவை, இந்திய மொழிகளில் குறிப்பாகப் பேச்சுவழக்குச் சொற்களில், ஒன்றாகவே உள்ளன. இந்தியாவில் பேசப்படும் 1600 கிளைமொழிகளையும் ஆய்ந்தால் இப் பேருண்மை முற்றாகத் தெற்றெனப் புலப்படும்.

ஆவித்தல்—வாய்திறத்தல், கொட்டாவி விடுதல், வெப்பமூட்டுதல், வேகவைத்தல். மட்பாண்டத் தொழிலாளர் பெருமளவில் மட்பாண்டங்களைச் செய்வதால் குழித்த நிலம் பெரும் பள்ளமாகமாறி அதுவே பக்கப் படிக்கட்டுகள் கட்டப்பட்டு நிலைத்த நீர் நிலையாக மாற்றப்படும் வழக்கம் இந்தியாவின் பலவிடங்களிலும் பின்பற்றப்பட்டு வந்திருக்கவேண்டும். ஆதலால், மட்பாண்டச் சூளையிருந்த பெருங்குழிகள் நீர்நிலைகளானபோது ஆவிக்குளம் என்றும் பெயர் பெற்றன. மட்பாண்டச் சூளைக்கு 'ஆவி' என்பது பரவலான பெருவழக்குச் சொல். ஆவி என்னுஞ்சொல்லே நாளடைவில் வகர முன்மெய் சேர்க்கப்பட்டு வாவி என்றும் வடமொழியில் வாபி (Vāpi) என்றும் வழங்கத் தலைப்பட்டது. ஒ. நோ: ஆவு (முன்சொல்)—>வாவு (தாவு). வடமொழியில் வாபி என்னும் சொல்லுக்கு வேரில்லை; ஆவி என்னும் சொல்லும் வடமொழியில் இல்லை. வாவியை வடமொழி தமிழிலிருந்து கடன்

பெற்றிருக்கிறது. வடமொழியிலுள்ள வாபி (Vāpi) நீள்சதுர வடிவமுள்ள குளத்தையே குறிக்கிறது.

ஆவி—மட்பாண்டங்களைச்சுடும் சூளை.

க. ஆவெ, ஆவி, ஆவகெ. து. ஆவெ. தெ. ஆவ.

க. ஆவிகண்ணு—செங்கண், சூட்டுக்கண்.

குட. ஆவலிச். து. ஆவல், ம. அவி இத். கோத. ஆவச்.

துத. ஒபுல்ய. பர். ஆவ், ஆவ்குட்.

கட. ஆய். ஒல். ஆம். குருக். ஒலஆனு.

மா. ஆவொலெ. பிராகு. ஆவாலிங். மரா. ஆவா.

இந். ஆவா. சீனம். ஆவொ—கொதிக்கவை, வேகவை. கஞ்சிகாய்ச்சு.

மலே. அவ (ன்)—மேகம்.

பாலி. ஆவொப்ப—மட்பாண்டச்சூளை, அடுப்பு.

ஆவொட்ட—குழி, பள்ளம். ம. ஆவி—நீர்நிலை, குளம்.

த. ஆவி- குளம், நீர்நிலை (பிங்.).

*Skt.* vāpi—large, oblong pond, an oblong reservoir of water, pool or lake (M.S.E.D.).

க. ஆவெய குண்ட்டெ—ஆவிக்குளம்.

த. ஆவிதிறை—குயவனின் சூளைக்கு வாங்கப்பட்ட வரி.

ஆவித்தல்—வேகவைத்தல், எரித்தல், அழித்தல் பொருள்களிலும், எரித்தல், ஒளிர்தல் பொருள்களிலும், இடந்தோறும் காலந்தோறும் வேறுபட்டு வழங்கி வந்திருக்கிறது. ஒளிவிடற் பொருளில் வடவனலை (aurora borealis) ஆவியனல் என்னுஞ் சொல்லாட்சி பண்டு குறித்திருக்கிறது. அதன் விளைவாக ஆவி—aurora என மருவி மேலையாரிய மொழிகளில் இன்றும் வழங்கி வருகிறது.

Aurora Luminous atmospheric (prob. electrical) Phenomenon radiating from earth's northern (—borealis) or southern (—australis) magnetic pole; dawn; Colour of sky to sunrise : (L. = dawn, goddess of dawn) (COD).

ஆவித்தல்—அழிதல் பொருளில் மேலையாரிய மொழிகளில் வேரூன்றியுள்ளது.

*OF.* avarice. *Sp.* averta. *Pg.*, *It.* avaiwa. *Du.* avarij.

*G.* hauaric. *Arab.* awaniya—damaged goods.

*F.* dawār—damage.

*E.* average—apportionment of loss of ship cargo, or freight, through unavoidable accident.

ஆவித்தல்—வெப்பமூட்டுதல் என்னுஞ்சொல் இருவகை வேரினின்று கிளைத்தசொல்.

இஃது இடவழக்குக்கேற்பப் பொருள் திரிபுற்றது.

1. ஆ—வாய்திறத்தல் ஒலிக்குறிப்புச் சொல்.

ஆகாட்டு—வாய்திற. ஆ என்னு, ஆன்னு (கொச்சை)—வாய்திற.

ஆவித்தல்—வாய்திறத்தலால் வெளிவரும் வெய்ய ஆவி, வெதுவெதுப்பூட்டுகை, வெப்பமூட்டுகை.

ஆவித்தல்—வாய்விடுதல் (சீவக. 3124), பெருமூச்சு விடுதல்.

"இரும்பசியதுகூர வரவ மாவிக்கும்" (திவ். பெரியதி. 1, 2, 8).

உயிர்த்தன ளாவியே (கம்பரா. நிந்தனை, 69).

க. ஆகலிசு (வாய்திற). தெ. ஆவுலின்சு (வாய்திற).

2. ஆவு—முன்செல். மேலேறு. ஆவி—நீராவி, புகை.

ஆவித்தல்—ஆவி வெளிவரச் செய்தல், புகை வெளிவரச் செய்தல், புகை மேலெழும்பச் செய்தல், வேகவைத்தல். ஒ. நோ: ஆவு—>வாவு (தாவு). ஆவுதல்—வாவுதல். வாவல்—வௌவால். ஆவு என்னும் வேரினடியாக உலகமொழிகளில் இச்சொல் மேகம், பறவை என்னும் பொருள்களில் புடைபெயர்ந்துள்ளது. *Skt.* vāyasa—bird. *L.* avis—bird. (of. aviation, avion—aeroplane). Arm hav—bird.

ஆவு—முன்செல், மேலேறு, வலிமை என்னும் பொருள்களில் வளர்ந்தபோது வலிமை மிக்க ஆவியர்குடியைக் குறித்ததோடு அக்குடியில் பிறந்த வேள்ஆவி போன்ற பழந்தமிழ் மன்னர்க்கு இயற்பெயராயும் அமைந்தது.

மேற்கண்ட கூற்றுகளிலிருந்து 'ஆவி' என்பது மட்பாண்டச் சூளையைக் குறித்த பழஞ்சொல் என்றும் மட்பாண்டத் தொழிலாளர் குழித்த பள்ளமே பலவிடங்களில் குளங்களாக மாற்றப்பட்டு ஆவிக்குளம் என்று பெயர் பெற்றது என்றும் அறியலாம். சொல்லாய்வு பழந்தமிழ் மக்களின் வாழ்வியல் கூறுகளைத் தெளிவுறுத்தி உறுதிப்படுத்தும் என்பதற்கு இச்சொல் ஒரு சான்று.

———

# 'துணைவினைகள்'

[புலவர் இரா. கிருட்டிணன் (இராகி.) பி. லிட்.]

நண்பர் ஒருவர் நம்மிடம் வருகிறார்; வந்தவுடனே, நம் மனநிலையை உணராமல், "நான் சொல்வதைச் சிறிது கேள்", என்கிறார். நாமும் அப்போதைய மனநிலைக்கு ஏற்ப, நம் உள்ளத்து உணர்ச்சிகளை நம்மையும் அறியாமல் வெளியிட்டு விடுகிறோம்.

"சொல்ல வந்ததைச் 'சொல்லு" என்று மட்டும் சொல்லாமல்;

'சொல்லித்தொலை' என்றோ, 'சொல்லியழு' என்றோ சொல்லுகிறோம். சிலர் 'சொல்லிப்போடு' என்றும் சொல்லுவர். இவ்வாறு கூறுவனவற்றுள் வரும், தொலை, அழு, போடு என்பவைகளை இன்றைய மொழி நூலறிஞர் 'துணை வினைகள்' என்பர்.

பாட்டுக் கோட்டையாகத் திகழ்ந்த பட்டுக்கோட்டையின் (திரு. கலியாணசுந்தரம்) திரைப்படப் பாடலொன்றில் 'போடு' என்னும் துணைவினை சக்கை 'போடு' போட்டுள்ளது என்பதை யாவரும் அறிவர்.

('நாத்தைப் பறிச்சி நட்டுப்போடு செல்லக்கண்ணு—தண்ணியை
ஏத்தம் பிடிச்சி எறச்சிப்போடு செல்லக்கண்ணு' )

'துணை வினைகள் பெரும்பாலும் ஒரு புதிய பொருளை அல்லது உள்ளத்து உணர்ச்சியை வெளியிடவே வருகின்றன', என்பது இன்றைய மொழி நூலறிஞர் கூற்று.

நம் முன்னோர் துணைவினைகளைப்பற்றி விதந்து கூறவில்லை எனினும், பல்வேறு துணைவினைகளை ஆண்டுள்ளனர் என்பது தேற்றம். எனவே,

*"முன்னோர் மொழிபொருளே அன்றி அவர்மொழியும்
பொன்னேபோல் போற்றுவம்......"

என்பதற்கேற்ப, சிறிது பின்னோக்கிச் சென்று முன்னேற முயல்வோம்.

[1]"சொல்லெனப் படுப பெயரே வினையென்று
ஆயிரண் டென்ப அறிந்திசி னோரே"

என்றும்,

---

* நன்னூல் - காண்டிகை. பொதுப்பாயிரம்: 9.
1. தொல் - சொல் - நச்சர். கழக வெளியீடு. நூற்பா : 160.

[2]''இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும்
அவற்றுவழி மருங்கில் தோன்றும் என்ப''

என்றும், ஈரிடங்களில் இரண்டிரண்டாகப் பகுத்துக் கூறி, சொற்களின் வகை நான்கு என்று சுட்டிக் காட்டினர் தொல்காப்பியர்.

இனி, இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்று நான்கு வகையாகப் பகுக்கப்படாதோ எனின், [3]'அவையனைத்தும் செய்யுள் ஈட்டச் சொல் என்க' என்றார் தொல்காப்பியர். இவற்றை உட்கொண்டே பவணந்தியார்,

[4]''இயற்சொல் திரிசொல் இயல்பிற் பெயர்வினை
எனவிரண் டாகும் இடையுரி யடுத்து
நான்குமாம் திசைவட சொல்லணு காவழி''

என்றார்.

இவ்வாறு தொன்று தொட்டே இலக்கண நூலார் சொல்லை நான்காகப் பகுத்தனரேயன்றி, துணை வினை என்று தனியாகவோ வினையியல், எச்சவியல் போன்ற பிறவிடங்களிலோ கூறவில்லையே என்று ஐயம் எழுதல் இயல்பே.

''மொழி' என்பது எண்ணத்தையும் கருத்தையும் உள்ளத்து உணர்ச்சியையும் வெளியிடும் கருவி'' என்று மொழி நூலார் கூறினாலும், தமிழ்மொழி அறிவுக் கூர்மையையும் கூறுபாடுகளையும் தன்னகத்தே கொண்டுள்ளது என்பதைத் தமிழ் இலக்கிய இலக்கணங்களைக் கற்றோரும் கற்பாரும் இனிதே அறிவர். 'உயர் தனிச் செம்மொழி' எனப் போற்றப்படும் நந்தம் தமிழ் மொழி, இலக்கிய வளமும் இலக்கண வரம்பும் பெற்றிருப்பதோடு சிறந்த மரபையும் பெற்றுள்ளது. அம்மரபிலேயே 'துணை வினை'களையும் அடக்கிக் கூறலாம்.

ஒரு மொழிக்கேயுரிய சொல்மரபுகளும் தொடர் மரபுகளும் பொதுவாக மரபு எனப்படும். இதையே பவணந்தியார்,

[5]''எப்பொருள் எச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர்
செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே''

என்றார்.

---

2. தொல்-சொல்-நச்சர். கழக வெளியீடு, நூற்பா : 161.
3. ,, ,, ,, ,, ,, எச்சவியல் ,, : 397.
4. நன்னூல். காண்டிகை. வை. மு. ச. நூற்பா: 280.
5. நன் : 388.

ஈண்டுப் பவணந்தியார், பொதுவாக—'உலகோர் செப்பினர் ...' என்று கூருது 'உயர்ந்தோர் செப்பினர்...' என்று கூறியுள்ளமை நோக்கத் தக்கது. [6]'வழக்கெனப் படுவது உயர்ந்தோர் மேற்றே' என்பதும் சிந்தனைக் குரியது.

தொல்காப்பியரும் மரபைப் பற்றி,

[7]"நுதலிய மரபின் உரியவை உரிய"

[8]"தத்தம் மரபில் தோன்றுமன் பொருளே"

என்றெல்லாம் பல்வேறிடங்களில் கூறியிருப்பதோடு அமையாது, [9]"மாற்றருஞ் சிறப்பின் மரபியல்—கிளப்பின்..." எனத்தனியோர் இயலை இறுதியில் வைத்துத் தொல்காப்பியத்தை நிறைவு செய்துள்ளார். இம் மரபை உணராத காரணத்தாலோ சொற்பொருளை மயங்க உணர்ந்ததாலோ இன்றைய 'கற்றறிந்தாய்ந்த அறிஞர் பலர்' துணை வினைகளை மரபுக்கு மாருகப் பயன்படுத்துகின்றனர்.

சங்க காலம் முதலே பல்வேறு துணை வினைகள் ஆளப்படுகின்றன என்பதை ஆழ்ந்து நோக்கின் நன்கு உணரலாம். அவற்றுள் குறிப்பிடத்தக்கன: இடு, விடு, படு, பெறு, உண், அருள் முதலியன. ஈண்டு, நம் ஆய்வுக்கும் சிந்தனைக்கும் உரியன படு, பெறு என்னும் இரு துணை வினைகளே யாகும்.

| துணைவினை இன்றி வருவன | துணைவினை பெற்று வருவன |
|---|---|
| 1. கூறும் கருத்து ...... | கூறப்படும் கருத்து |
| 2. சொல்லும் முறை ...... | சொல்லப்படும் முறை |
| 3. கூட்டம் இன்று நடக்கிறது | கூட்டம் இன்று நடைபெறுகிறது |
| 4. கூட்டம் நாளை நடக்கும் | கூட்டம் நாளை நடைபெறும் |

படு, பெறு என்னும் இரு துணைவினைகளும் மரபையொட்டியே மேலே ஆளப்பட்டுள்ளன. இன்று சிலர், இம் மரபுக்கு மாருக வழங்கும் சில தொடர்களையும் காண்போம்.

1. '...பாடங்கள் இன்று கற்பிக்கப் பெறுகின்றன.'
2. '...வழிநின்று செய்யப்பெறும்.'

6. தொல் - மரபு - பேரா - 647.
7, 8. தொல் - பொருள் - உவமை : 281, 282.
9. தொல் - மரபு : 656.

3. '...இணைக்கப் பெறல் வேண்டும்.'
4. '...தாய்மொழிக்கு முதலிடம் வழங்கப்பெற்றுள்ளது.'
5. '...கல்விக்கு உரிய இடம் தரப்பெற்றுள்ளன.'
6. '...விதிகளும் அமைக்கப்பெற்றன.'
7. '...பட்டியலில் குறிக்கப்பெற்றுள்ள நூல்களையும்...'

மேற்கண்ட தொடர்கள் அனைத்தும் தமிழ்நாட்டின் பல்கலைக் கழகம் ஒன்று, அஞ்சல் வழிக் கல்வித்துறையில் வெளியிட்டுள்ள பாட நூலொன்றில், ஆங்காங்கே காணப்படுவனவாகும். அனைத்துத் தொடர்களிலும் 'பெறு' என்னும் துணைவினையே ஆளப்பட்டுள்ளமை தெற்றெனப் புலப்படும்.

'...கற்பிக்கப்படுகின்றன. ...செய்யப்படும். ...இணைக்கப் படல் வேண்டும். ...வழங்கப்பட்டுள்ளது. ...தரப்பட்டுள்ளன. ...அமைக்கப்பட்டன. ...குறிக்கப்பட்டுள்ள நூல்களையும். என்று, 'படு' என்னும் துணைவினை ஆளப்பட வேண்டிய இடங்களிலெல்லாம் 'பெறு' என்னும் துணைவினையே—ஆளப்பட்டுள்ளமைக்குக் காரணம், ஆட்சியை நோக்காமையும், மரபைப் போற்றாமையும் எனலாம்.

'கள்' என்பது சொல்லாகவும் விகுதியாகவும் வருதல் போலப் 'படு' என்பதும் முதல்நிலையாகவும் துணைவினையாகவும் வரும்.

[10]'படு' என்னும் சொல்லுக்குப் பல்பொருள்கள் கூறப்படும். குளம், உப்பு, கள், குலை, கூர்மை, நன்மை, நீர்நிலை, மிகுதி, உண்டு என்னும் பொருள்களிலும், '(கீழே) படு' என்னும் ஏவற் பொருளிலும் வரும்.

படுகளம், படுகுழி, படுபொருள், படுஞாயிறு, படுபாவி என்றெல்லாம் 'படு' முதல்நிலையாக வந்துள்ள வழக்கை நோக்குக.

'படு' என்னும் முதனிலை 'தல்' என்னும் தொழிற்பெயர் விகுதி பெற்றுப் 'படுதல்' என்றும் வரும்.

[11]'படுதல்' என்பதற்குரிய பொருள்களை இருவகையாகப் பகுத்துக் கூறலாம்.

உண்டாதல், உடன்படல், உதித்தல், தோன்றல், ஒலித்தல், பொறுத்தல் ஆகியன ஒருவகை.

அழிதல், மறைதல், துன்புறல், தாங்குதல், தொங்குதல், தாழ்தல், விழ்தல், சாய்தல், இறத்தல், பொருதல் ஆகியன மற்றொரு வகை.

---

10. கழகத் தமிழ் அகராதி: பக். 579.
11. கழகத் தமிழ் அகராதி. பக். 645.

மேற்கண்டவற்றுள்: "அழிதல், வீழ்தல், சாய்தல், இறந்தல் முதலியன அமங்கலமான இழிவுப் பொருளைத் தருவதால், 'படு' என்னும் துணைவினை ஏற்புடைத்தன்று!" என்று எண்ணி, இக்கால அறிஞர் பலர் 'பெறு' என்னும் துணைவினையை ஆள்கின்றனர் போலும்! ஆனால் உண்டாதல், உதித்தல், தோன்றல் முதலிய மங்கலமான உயர்வுப் பொருளும் உண்டு என்பதை ஏனோ உணரவில்லை?

[12]"இலமென் கிளவிக்குப் படுவருகாலை"—எனத்தொடங்கும் நூற்பாவுக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர், 'படு' என்பதற்கு 'உண்டாதல்' என்றே பொருள் கூறியுள்ளார்.

மூன்றும் வேற்றுமையுருபு எந்தெந்தப் பொருளில் வரும், என்பதைக் கூறுமிடத்து, [13]"ஆல், ஆன் உருபுகளுக்குக் கருவிப் பொருளும் கருத்தாப் பொருளும்...சிறந்தனவென்க" என்பதோடு கருத்தாவை: இயற்றுதற் கருத்தா, ஏவுதற் கருத்தா என்று இரு வகையாகப் பகுத்து, எடுத்துக்காட்டுகளைக் காட்டும் போது,

'தச்சனால் கோயில் கட்டப்பட்டது.—இயற்றுதற் கருத்தா.

அரசனால் கோயில் கட்டப்பட்டது.—ஏவுதற் கருத்தா.'

என்று உரையாசிரியர் கூறியுள்ளனவும் சிந்தனைக்கு விருந்தாம்.

செய்வினையைச் செயப்பாட்டு வினையாக மாற்றும்போதும் 'படு' என்னும் துணைவினையே ஆளப்படுகிறது என்பதும் தேற்றம்.

எடுத்துக்காட்டு:

| செய்வினை | செயப்பாட்டு வினை |
|---|---|
| 1. திருவள்ளுவர் திருக்குறளை இயற்றினார். | திருக்குறள் திருவள்ளுவரால் இயற்றப்பட்டது. |
| 2. அரசன் கோயிலைக் கட்டினான். | கோவில் அரசனால் கட்டப்பட்டது. |

தொல்காப்பியர்; தொல்காப்பியத்தைத் தொடங்குகின்ற போழ்தே; [14]"எழுத்தெனப் படுப..." என்று தொடங்குகின்றார். இதற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியரும், 'எழுத்தென்று சிறப்பித்துச் சொல்லப்படுவன' என்று கூறியுள்ளார். ஈண்டுப் 'படு' என்பதை அமங்கலமான இழிவுப் பொருளிலா ஆண்டுள்ளனர்!

(தொடரும்)

12. தொல் - எழுத்து - நச்சர் : நூற்பா. 316.
13. நன் - காண்டிகை. 297 உரை.
14. தொல் - எழுத்து: 1.

# தமிழரின் சிந்துவெளி நாகரிகச் சின்னங்கள்

[திரு. பி. இராமநாதன், சென்னை.]

இந்தியாவிற்குள் ஆரியர் நுழைந்தது ஏறத்தாழ கி. மு. 1500-ஐ ஒட்டியாகும். அதற்குமுன் நாவலந்தீவெங்கும் அதாவது இந்தியாவெங்கும் பரவியிருந்த, தமிழர் நாகரிகச் சின்னங்களில் சிந்து வெளியிற் கண்டெடுக்கப்பட்டுள்ளவற்றின் அடிப்படையில் சிந்துவெளி நாகரிகம் என்று அழைக்கப்படும் நாகரிகத்தின் காலம் கி. மு. 3000—1200 ஆகும். சிந்து ஆறு பாயும் சமவெளியில் பஞ்சாபில் (1920ல்) ஹரப்பாவிலும், சிந்து மாகாணத்தில் (1922ல்) மொகஞ்சோதாரோவிலும் அகழ்ந்தெடுத்த புதையுண்ட நகரங்கள் மட்டுமன்றி அந் நாகரிக கால நகரங்களின் சின்னங்கள் 1947க்குப்பின் நடந்த அகழ்வாய்வுகளில் டெல்லியை ஒட்டி ஆலம்கீர்பூர், ராசத்தானத்தில் கலிபங்கன், குசராத்தில் லோதால் போன்ற நூற்றுக்கணக்கான வேறு இடங்களிலும் கிடைத்துள்ளன.

2. தமிழ் நூற்கடலை மட்டுமன்றி ஆரியவேதங்கள் போன்றவற்றையும் கற்றுத்துறைபோய நுண்ணறிவினரான மறைமலையடிகளார் போன்றோர் அவ் வகழ்வாராய்வு முடிவுகள் வெளிப்படு முன்னர் எழுதிய நூல்களிலேயே வடநாட்டில் ஆரியர்களால் அழித்தொழிக்கப்பட்ட தமிழர் நகர நாகரிகம் இருந்திருக்க வேண்டும் என்று அறுதியிட்டு எழுதியிருப்பது வியத்தற்குரியது. அடிகளார் தமது "வேளாளர் நாகரிகம்" (முதற் பதிப்பு 1923) என்னும் நூலில், "இந்தியாவில் வடமேற்கில் குடிபுகுந்த ஆரியரின் புலையொழுக்கம்" என்னும் 9வது இயலில், ஆரியர் நுழையும் பொழுது வடநாட்டில் "அரசாண்ட தமிழரசர்களாகிய வேளிர் பல நகரங்கள் அமைத்து வலிய கோட்டைகள் கட்டி வலிமையும் நாகரிகமும் உடையவராய் விளங்கினரென்பது அவர்பால் வந்தெய்திய ஆரியரே தம்முடைய இருக்குவேதப் பாட்டுகளிற் கூறுமாற்றால் நன்குவிளங்கு'வதை விரிவாக விளக்குகின்றார். ஆரியக் கடவுளர் தலைவன் இந்திரனே ஆடுமாடுகளின் இறைச்சிக் குவியலைத் தின்று, சோமச்சாற்று மதுவைத் தொட்டி தொட்டியாகக் குடித்துவிட்டு தாசர்கள் என்று அழைக்கப்பட்ட தமிழர்தம் நகரங்களையும் கோட்டைகளையும் அழித்தொழிக்கும் "புரந்தரன்" தானே!

3. எனவே, கி. மு. 1500க்கு முந்திய சிந்துவெளி நகர நாகரிகச் சின்னங்கள் கண்டுபிடிக்கப்பட்டபின் நேர்மையும் வாய்மையும் சான்ற அயல் நாட்டு அறிஞர்கள் அனைவரும் (சர் ஜான் மார்ஷல், சர் மார்டிமர் விலர், ஹீராஸ் பாதிரியார், வில் டுராண்ட்)

போன்றவர்கள் மட்டுமின்றி உருசிய அறிஞர்களான கானரசால், கான்ட்ரடாவ் போன்றவர்களும்) சிந்துவெளி நாகரிகம் திராவிடருடையது (அதாவது தமிழருடையது) என்பதையும், ஆரியர் புகுந்த பின்னர் அவர்களால் அந் நாகரிகம் அழிந்தது என்பதையும் ஏற்கின்றனர்.[1] ஆனால் இந்தியத் தொல் ஆராய்ச்சி நூல்களிலும் அறிஞர் எழுதும் வரலாறுகளிலும் மட்டுமன்றி மாணவர்களுக்கான நூல்களிலும் அயல்நாட்டு அறிஞர்கள் தெளிவாக சிந்து சமவெளி நாகரிகம் திராவிடருடையது என்பதைத் தெரிவிக்கின்றனர். எடுத்துக்காட்டு :

Longman Secondary Histories: THE ANCIENT WORLD By R. J. Coots and L. E. Snellgrove); Longmans 1970; pp 200; Chapter 13; Lost cities of the Indus :

> "It seems that at one time, probably between 2500 and 1500 B. C. an area of a thousand square miles, stretching from the Arabian sea to the Simla Hills was dotted with the cities and Villages of a race which had been named Dravidian"

ஆனால் ஆரியச் சார்பான இந்தியத் தொல்பொருளியலாய்வாளர்களான பி. பி. லால்,[2] எஸ். ஆர். ராவ் போன்றோர் வல்லடி வழக்காக சிந்துவெளி நாகரிகம் "ஆரியருடையது என்றோ, அல்லது திராவிடருடையது என்றோ உறுதியாகக் கூறமுடியாது" என்று கூறிவிடுகின்றனர். எடுத்ததற்கெல்லாம் வேதங்களில் உள்ள கூற்றுக்களை ஆதாரம் காட்டும் இவர்கள், இந்த விஷயம் வரும்பொழுது மட்டும் வேதங்களில் பரவலாக ஆரியரல்லாதாருடைய நகரங்களையும் கோட்டைகளையும் ஆரியக் கடவுளன் இந்திரன் அழித்தொழித்த குறிப்புகளை (அவற்றுள் சிலவற்றை மறைமலையடிகளார் மேற்சொன்ன நூலில் சுட்டியுள்ளார்) விரகாக மறந்துவிட்டு, புதையுண்ட நகரங்களில் கண்டெடுக்கப்பட்டவற்றில் ஆரியரால் நிகழ்ந்த அழிவிற்குத் தடயங்கள் இல்லையே என்று மட்டும் மாய்மாலமாகக் கூறிவிடுகின்றனர். தடயங்கள் இருப்பதாக ஓர்ந்து சொன்ன சர் மார்டிமர் வீலர்[1] போன்ற நேர்மையாளர்மீது பாய்வதற்கும் இவர்கள் தவறுவதில்லை; 1947க்கு முன்னரே அறிஞர்கள் மார்ஷல், வீலர்

---

1. T. Burrow: THE SANSKRIT LANGUAGE (III Editon, 1973); Faber and Faber, London; page 30 "The Aryanisation of North West India can be dated by the end of the Indus civilisation, for which no doubt they were largely responsible"

2. A Cultural History of India; Edited by A. L. Basham (Oxford, 1975) see Chapter on Indus Civilisation by B. B. Lal.

போன்ருேர் பன்னாட்டு அறிஞர்களும் ஏற்கும் வண்ணம் சிந்து வெளி நாகரிக (மொகஞ்சோதாரோ, ஹரப்பா) உண்மைகளை யெல்லாம் வெளிப்படுத்தி நிறுவியிராவிடின் நம் இந்தியத் தொல்பொருளாய்வாளர் எந்த அளவுக்கும் திருத்திட அஞ்சி யிரார் என்பதற்கு இவர்களுடைய தற்போதைய நிலையே உரைகல்லாகும்.

4. எழுதுவதற்குத் தமிழர் ஓலைச் சுவடிகளையே பயன் படுத்தியதனுல், பண்டைய எழுத்துச் சின்னங்களைத் தமிழகத்தில் காணல் அரிது. கி. மு. 3ம் நூற்ருண்டைச் சார்ந்ததெனப் பல ராலும் ஏற்கப்படும் தொல்காப்பியத்திலிருந்து அதற்குப் பல நூற்ருண்டுகளுக்கு முன்னர் இருந்தே தமிழில் சிறந்த எழுத்து முறையும் நிறைந்த இலக்கியங்களும் இருந்திருக்க வேண்டும் என்பது தெரியும். கல்வெட்டுகளைக் கொண்டு அக்காலத்தில் தமிழ்நாட்டில் பிராமி மொழியே, அதுவும் மிகச் சாதாரண நிலையில் (இலக்கியங்கள் தோன்றும் நிலைக்கு உயராமல்) பயன் படுத்தபட்டதாக முடிவு செய்வது முழுத் தவருக முடியுமன்ருே?

5. சிந்து வெளிநாகரிக முத்திரை எழுத்துக்கள் என்பவை சுமார் 800 "ஸ்டீயட்டைட்" (சவர்க்காரக்கல்) முத்திரைகளிலும், ஓரிரு செப்புப் பாத்திரங்கள் போன்றவற்றிலும் உள்ளவை. ஒவ் வொரு முத்திரையும் சுமார் 20 மில்லி மீட்டர் 30 மி. மீ. அள வுள்ளது (அதாவது ஏறத்தாழ தீப்பெட்டி அளவு). அவற்றில் உள்ள சொற்ருெடர்கள் மொத்தம் சுமார் 2000. ஒவ்வொரு சொற்ருெடரும் 1லிருந்து 20சொல்லெழுத்துக்களைக் கொண்டது. (சராசரி ஒரு சொற்ருெடருக்கு 5 சொல்லெழுத்து. அவை பழந் தமிழே என முதலில் ஆராய்ந்து தெரிவித்தவர் ஹீராஸ் பாதிரியார் ஆவார். அவற்றில் 1944 சொற்ருெடர்களை பின்லாந்து அறிஞர்கள் அஸ்கோ பர்போலா முதலியவர்களும், உருசிய அறிஞர்களான வி. கானரசாவ் போன்றவர்களும் ஆய்வுசெய்து தமது முடிவை 1969-ல் அறிவித்தனர். அந்த 1944 சொற் ருெடர்களில் மொத்தம் இருந்த சொல்லெழுத்துக்கள் 9147. பல சொல்லெழுத்துக்கள் ஒன்றுக்கு மேற்பட்ட தடவை வந்திருந்தன வாதலின் தனிப்பட்ட சொல்லெழுத்துக்களின் மொத்த எண் ணிக்கை சுமார் 300 அல்லது 350 தான். 1969-ல் அவ்வறிஞர்கள் நிறுவிய முடிவு அவ்வெழுத்துக்களில்

1. The Indus Civilisation (III Edition) by Sir Mortimer Wheeler; Cambridge University Press; 1968 (144 p; 34 PP plates)

உள்ள மொழி பழந்திராவிடம் (பழந்தமிழ்) என்பதுதான்.[1] தமிழ்நாட்டு அறிஞர் திரு ஐராவதம் மகாதேவன் அவர்களும் இவ்வெழுத்துக்களைப்பற்றிச் சில ஆண்டுகள் "நேரு நிறுவன" நிதி உதவியுடன் ஆராய்ந்து இறுதியாக வெளியிட்டுள்ள பொத்தகத்தில் அவ்வெழுத்துக்களை இந்தோ ஆரிய மொழியாகக் கருதினால் எப்படிப் படிக்கலாம் என்பதையும் காட்டுகிறார் என்றாலும், பழந்திராவிடமாகப் படித்தால் எப்படிப் படிக்கலாம் என்பதை 1970-ல் வெளியிட்டார்.[2] இவ்வறிஞர்கள் முறைக்குச்சில எடுத்துக்காட்டுக்கள் வருமாறு:—9147 சொல்லெழுத்துக்களில் என்பது தான் அடிக்கடி வருவது. அது 873 தடவை வருகிறது. மாறனது, வேலனது என்பதிற்போல உடைமைப் பொருளைக் காட்டும் சொல்லுறுப்பு என்பது பர்போலா கருத்து. மகாதேவன் கருத்தோ அது வண்ணக்கன் தேவன் சாத்தன் என்பதிற்போல "அன்" என்னும் ஆண்பால் ஒருமை காட்டும் சொல்லுறுப்பு என்பதாகும். ஐந்து வகையான மீன் சின்னங்கள் வருகின்றன. அவை செவ்வாய், அறிவன், வியாழன், வெள்ளி, காரி ஆகிய ஐந்து கோள்களைக் குறிக்கும் என்பது பர்போலா கருத்து. அவை வேள்; மிழை; ஆய் போன்ற பழந்தமிழ்ப் பெயர் உறுப்புகளாயிருக்கலாம் என்பது மகாதேவன் கருத்து. சில சில சொல்லெழுத்துக்களே கிடைத்துள்ளனவும், வேறு தெரிந்த மொழி எதையும் உடன் தருவதான இருமொழிக் கல்வெட்டு (எகிப்திய ரோசெட்டா கல் போன்றது) கிடைக்காதனவும் ஆன இத்தகைய தொல்லெழுத்துக்களைப் பொறுத்தவரை ஆய்வாளர் தத்தமக்குத் தோன்றியவாறு எந்தமொழியிலும் படிக்க இயலும்; ஆனால் இத்தகைய கல்வெட்டுக்கள் கிடைத்த இடங்கள், சூழ்நிலை, அவ்விடங்களின் தொல் வரலாறுபற்றிப் பிற ஆதாரங்களிலிருந்து கிடைத்த செய்திகள் ஆகியவற்றை மனதிற்கொண்டு ஆய்பவரே எந்த மொழிக் குடும்பத்தைச் சார்ந்ததாக அவ்வெழுத்துக்கள் இருக்கலாம் என்பதைப் பற்றிப் பொருத்தமான ஒரு முடிவை முதற்கண் மேற்கொண்டு பின்னர் எழுத்துக்களின் வாசகங்களை ஓரளவு உன்னிக்க இயலும்.

---

1. Parpola, Asko et al (1969): "Decipherment of the proto Dravidian inscriptions of the Indus civilisation—A first announcement" (The Scandinavian Institute of Asian Studies, Copenhagen; pp. 71; plates, tables, maps; index).

2. JOURNAL OF TAMIL STUDIES; Vol. II; No. 1; May 1970; Iravatham Mahadevan article "Dravidian parallels in Proto Indian script" at pp. 157-276.

பழந் தமிழிலக்கியங்கள், ஆரிய வேதங்கள் ஆகியவற்றை நடு நின்று ஓர்ந்தவர்கள் இவ்வெழுத்துக்கள் பழந்தமிழ் அல்லது அதைச் சார்ந்த மொழியாக இருக்கலாம் என்று முடிவெடுப்பரே யன்றி எவ்வாற்ருனும் இந்தோ ஆரிய மொழியாக வாசிக்க ஒருப்படார்.

6. கி.மு. 3000க்கு முந்திய காலச்சின்னங்கள் சிந்துவெளிப் பகுதியில் சுமார் 1970க்கு முன்வரை அகழ்ந்தெடுக்கப்படவில்லை. அதே நேரத்தில் சுமேரிய "உபைத்" நாகரிகச் சின்னங்கள் கி. மு. 5000லிருந்து கிடைத்துள்ளன. எனவே வீலர் போன்ற வர்கள் நாகரிகம் முதலில் தோன்றி வளர்ந்தது சுமேரியா பகுதியில்தான் என்றும் அது ஒரு நிலைக்கு வந்த பின்னர் அங்கிருந்து சிந்து வெளிப் பகுதிக்குப் பரவியிருக்க வேண்டும் என்றும் கருதினர். ஆனல் 1970க்குப் பின்னர் மொகஞ்சோதரோவை ஒட்டி போலன் ஆற்றின் கரையில் மெஹர்கார் பகுதியில் பிரான்சு மற்றும் பாகிஸ்தான் நாட்டவர் அகழ்வாய்வு செய்து சிந்துவெளி நாகரிக காலத்துக்கு 3000 ஆண்டுகளுக்கு முன்னரே, அதாவது கி. மு. 6000 லிருந்தே அப் பகுதியில் ஒன்றன்பின் ஒன்ருகப் பல வேளாண்மைக் குடியிருப்புகள் இருந்ததை வெளிக் கொணர்ந்துள்ளனர். இந்த விவரங்களை விளக்கி "சையண்டிபிக் அமெரிக்கன்" 1980 ஆகச்டு இதழின் 102—110 பக்கங்களில் "சிந்து வெளியின் நாகரிகத்தின் தொல்வரவு" என்ற கட்டுரையை ஜீன் பிராங்கோ ஜாரிஜ் என்பவரும் ரிச்சர்ட் ஹெச். மெடோ என்பவரும் வெளியிட்டுள்ளனர்.[1]

7. மெகர்கரர்ல் கிடைத்துள்ள சின்னங்களிலிருந்து வீலர் முன்னர்த் தெரிவித்திருந்த கருத்தை மாற்றிக் கொள்வதற்கும் சிந்துவெளி நாகரிகம் இந்தியாவிற்குள்வேயே தோன்றி, இடைவீடின்றிப் படிப்படியாக முதிர்ச்சி பெற்றது என்பதற்கும் நல்ல ஆதாரம் கிடைத்துள்ளது. ஆடு, மாடு வளர்த்தல், தவசங்கள் பயிரிடுதல் பருத்தி பயிரிடுதல் போன்றவற்றிற்கும் மட்டுமின்றி மட்பாண்டங்கள் முதலிய கைத் தொழில்கள், வீடமைப்பு, நகரமைப்பு, முத்திரைகள் போன்ற பல துறைகளிலும் சிந்துவெளி நாகரிகத்தின் தொல்வரவிற்கான ஆதாரங்கள் வெளிக்கொணரப்பட்டுள்ளன. அகழ்வாய்வுகள் தொடர்ந்து நடக்கின்றனவாம். முழு முடிவுகளும் வெளிவரும் பொழுது தமிழ நாகரிகத்தின் தொன்மைக்கு மேலும் பல ஆதாரங்கள் கிடைக்கும்.

———

1. SCIENTIFIC AMERICAN (August 1980) pp 102-110; "The antecedents of Civilization in the Indus valley" by Jean-Francois Jarrige and Richard H. Meadow.

## *தேன்தமிழ் பரப்பிய ஞானியாரடிகள்!

[வேலூர் ம. நாராயணன், எம். ஏ.]

இனியநற் றமிழே எங்கள்
இன்னுயிர் வைப்பே; உன்றன்
தனிப்பெரும் மரபைக் காக்கத்
தவமுனிக் கோலந் தாங்கிப்
பனியிலும் வெய்யில் வேனிற்
பொழுதிலும் உழைத்த கொள்கைப்
பனிமலை 'ஞானி யார்' பேர்
பரிதிபோ லென்றும் வாழ்க!

இருப்பதோ ஒருயிர் அதனை
இழப்பதும் ஒருமுறை யென்னும்
மறுப்பதற் கியலா உண்மை
மறுவறத் தெளிந்த ஞானி
விருப்புடன் ஏற்ற தொண்டு
பாதிரிப் புலியூர் தங்கித்
திருமுறை சைவம் போற்றி
தேன்தமிழ் பரப்பல் அன்றோ!

முடைமணம் தோய்ந்த மண்ணில்
முல்லையாய் முகிழ்க்க லானார்
மிடியினி லுள்ள பேரும்
முத்தமிழ் அமுதம் உண்ணப்
படிப்படி யாகச் சங்கம்
பைந்தமிழ்ப் புலத்தில் நட்டார்
குடியர சென்னும் ஏட்டைக்
கோவையிற் றுவக்கி வைத்தார்.

தமிழவேள்; கவியர சென்றும்
நாடகத் தந்தை யென்றும்
அமிழ்தினு மினிய பட்டம்
ஆன்றவர்க் கீந்து நாளும்
கமழ்ந்திடும் வண்ணம் பேசிக்
கணக்கிலார் நெஞ்சில் நின்றார்
தமக்கென வாழா ராகித்
தமிழ்க்கென வாழ்ந்த சிலர்.

---

*மேத் திங்கள் 17ஆம் நாளில் வரும் ஞானியாரடிகள் 110ஆவது பிறந்தநாள் நிறைவினை முன்னிட்டு எழுதப்பெற்றது.

திருவாவடுதுறை ஆதீனம், திருமடத்தின் 22ஆவது தலைவர்

# தவத்திரு அம்பலவாண தேசிக பரமாச்சாரிய அடிகள் ஆற்றிய அரும்பணிகள்

சைவசமய ஆசிரிய பீடங்களுள் ஒன்றாகவும், திருக்கயிலாய பரம்பரையில் திரு. நந்திதேவர் திருமரபில் மெய்கண்டார் வழி முறையில் தவத்திரு ஆதீனத் தலைவர் அவர்களைப் பெற்று விளங்கும் பெருமைஉடையது திருவாவடுதுறை ஆதீனம்.

தவத்திரு நமசிவாய மூர்த்திகளுக்குப்பின் 22ஆவது தலைவராக 1967-ல் அறிவார்ந்த தலைமைப் பீடத்தமர்ந்து அருட்பணிகள் பலவற்றை ஆற்றிவந்த தவத்திரு. அம்பலவாண தேசிக பரமாசாரிய அடிகள் 7—4—83 வியாழக்கிழமை இரவு இறையடியிற் கலந்தார்கள்.

இவர்கள் தம் தலைமையின் கீழுள்ள திருவாவடுதுறை திருக்கோயில், திருவிடை மருதூர் திருக்கோயில் முதலிய சிவாலயத் திருப்பணிகளைச் செவ்வனே செய்தும், குடமுழுக்குகளைச் செய்வித்தும், ஆவுடையார் கோயில் என வழங்கும் திருப்பெருந்துறைத் திருக்கோயில் திருப்பணியைத் தொடங்கியும், திருவாவடுதுறை எல்லையிலுள்ள நெடுஞ்சாலையில் தோரண நுழைவாயில்கள் அமைத்தும் மாநாடுகள், மற்றும் கலைநிகழ்ச்சிகள் நடத்த 'மெய்கண்டார் விலாசம்' என்ற பெயரில் அரங்கம் அமைத்தும் திருமந்திர மாநாடு, திருமுறைக் கருத்தரங்கம், திருவாசக மாநாடு, அனைத்துலகச் சைவ மாநாடு முதலியன நிகழ்த்தியும், சமய நூல்களை வெளியிட்டும், அவற்றை 'இலவசமாக' வழங்கியும், 'மெய்கண்டார்' திங்களிதழ் தொடங்கியும் சமய சமூகப் பணிகட்குப் பெருங்கொடைகள் வழங்கியும் அருட்பணிகள் ஆற்றியும் சைவ நல்லுலகின் போற்றுதல்கட்கும் பாராட்டுதல்கட்கும் உரியரானார்கள்.

அவர்களை அடுத்து 23-வது தலைமை ஏற்றிருக்கும் தவத்திரு சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய அடிகள், இளமையும், கல்வி நலமும், தொண்டுள்ளமும், துறவுள்ளமும் படைத்தவர்கள். இவர்கள் விக்கிரமசிங்கபுரத்தில் பரம்பரைச் சைவ வேளாளர் குலத்தில் தோன்றியவர்கள். இவர்கள் காலத்தில் திருவாவடுதுறைத் திருமடம் மேலும் பல்வகைச் சிறப்புகளைப் பாங்குறப் பெற்றுத் திகழும் என்பது உறுதி.

———

# செய்திகளும் குறிப்புகளும்

## சித்திரைப் பெருவிழா

செங்கை மாவட்டம், கோடித்தண்டலம் அருள்ஞானப் பெருவெளி யின் சார்பில் இவ்வாண்டு சித்திரைப் பெருவிழா 24—4—83ல் தொடங்கி 27—4—83 முடிய நான்கு நாள்கள் சிறப்பாக நடை பெற்றது. முதல் நாள்: அறச்சுடர் திரு. க. முத்துலிங்கா ரெட்டியா ரவர்கள் கொடியேற்றிவைத்தார். இரண்டாம் நாள்: திரு. கே. அம்பி காபதி அவர்கள் வரவேற்புரை நிகழ்த்த, திரு. க. முத்துலிங்கா ரெட்டி யாரவர்கள் முன்னிலையில், தவத்திரு. செ. ரா. தேமொழியார் அவர்கள் தலைமையில் "சங்கநூலில் தத்துவ இயல்" என்னும் பொருள் பற்றிய கருத்தரங்கு நடைபெற்றது. திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி முதல்வர் பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி அவர்கள் "கலித்தொகையில் தத்துவ இயல்" என்னும் பொருள் பற்றியும், திரு. ஆ. வெ. சுப்பிர மணியம் அவர்கள்" புறநானூற்றில் தத்துவ இயல்" என்னும் பொருள் பற்றியும், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியர் உயர்திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்., அவர்கள் "குறுந்தொகையில் தத்துவ இயல்" என்னும் பொருள் பற்றியும் உரையாற்றினர். திரு. சு. இரகுபதி நன்றி நவின்றார். மூன்றும் நாள்: முன்னாள் உயர்நீதி மன்ற நடுவர் என். கிருட்டிணசாமி ரெட்டியார் அவர்கள் தலைமையில் நல்லாசிரியர், புலவர் திரு. மா. ஆறுமுகம், புலவர் எஸ். கணேசன், சிம்மக்குரல் திரு. சீதாபதி ஆகியோர் உரையாற்றினர். திரு. நாகலிங்கம் நன்றி உரை ஆற்றினார். நான்காம் நாள்: காலையில் வழிபாடும், அகவல் பாராயணமும் நடந்தபின், "வள்ளலார் நன்னெறி" என்னும் பொருள் பற்றி திருமதி அருட்பா கண்ணம்மாள் அவர்களும், "சன்மார்க்கம்" பற்றி பிரசங்கமணி ஏ.டி.ஏ, ஈசுவர் அவர்களும் உரையாற்றினர். திரு. பொன் நடராசன் நன்றி நவில விழா இனிது நிறைவுற்றது.

## சிவஞான மாபாடிய வகுப்பு

24—4—83ல், மாதவச் சிவஞான அடிகள் முத்தியடைந்த ஆயில்ய நாளான அந்நாளில், அவர்கள் அருளிய சிவஞானபோத மாபாடியம் வகுப்பு, தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தின் சார்பில், நெல்லைச் சிவஞான முனிவர் நூல் நிலையத்தில், மதுரை காமராசர் பல்கலைக் கழகப் பேராசிரியர் மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர் அவர் களால் தொடங்கி வைக்கப்பெற்றது. உயர்திரு ப. இலக்குமணன் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர். சொல்லின் செல்வர் சி. சு. மணி பி.ஏ., அவர்கள் வகுப்புகளை நடத்துவார். இவ் வகுப்பு வியாழக்கிழமை தோறும் மாலை 5-30 மணிக்கு ஓராண்டு காலம் நடைபெறும். சிவ நேயச் செல்வர்கள், தவறாது வந்திருந்து கேட்டுப் பயன்பெற வேண்டு மென சங்கச் செயலர் இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்., அவர்கள் கேட்டுக் கொள்ளுகிறார்கள்.

## புலவர் இரா. இளங்குமரனுர்க்கு வரவேற்பு

10—4—1983 ஞாயிறன்று நெய்வேலியில் பாவாணர் தமிழ்க் குடும்பத்தின் சார்பில் குடும்பச் செயலர் திரு தா. அன்புவாணன்—வெற்றிச் செல்வி தலைமையில் கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன் அவர்கட்கு வரவேற்பு அளிக்கப்பெற்றது. திருவாட்டி

தமிழரசி அறவாழி நிகழ்விற்கு வந்திருந்த அனைவரையும் வரவேற்றார். குடும்பச் செயலர் திரு. அன்புவாணன் அனைவரையும் அறிமுகம் செய்வித்தார். வரவேற்புக்கு நன்றி தெரிவித்து சிறப்புரையாற்றிய கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன் அவர்கள் அங்குக் கூடியிருந்த பெரியோர், மகளிர், சிறுவர், சிறுமியர் அனைவருடைய பெயரும் தமிழாக இருக்கக் கண்டு பேருவகையடைவதாகவும், இது போன்ற நிலையை வேறெங்கும் தாம் கண்டதில்லை எனவும், பாவாணர் தமிழ்க்குடும்பப் புதுமையமைப்பைப் பாராட்டி மொழிஞாயிறு பாவாணர் பற்றிய பல செய்திகளையும் தமிழின் சிறப்புக் குறித்தும் கேட்போர் மனங்கொள்ள எடுத்துரைத்தார். அவ் வரவேற்பில் உலகத் தமிழ்க் கழகத் துணைப் பொதுச் செயலாளர் திரு. கதிர், தமிழ்வாணன் அவர்கட்கும் வரவேற்பு அளிக்கப்பெற்றது. அவர்தம் உரையில் பா. த. குடும்பத்தை வாழ்த்திப் பாவாணரையும் தமிழையும் போற்றினார். கலந்துரையாடலுக்குப்பின் இன்சுவை சிறுவிருந்து வழங்கப்பெற்றது.

**வாழியூரில் முப்பெரு விழா**

17—4—83ஆம் தேதி வாழியூர் கம்பன் கழகத்தின் சார்பில் முப்பெரும் விழா நடைபெற்றது. திருவாளர்கள் வே. ச. ஞானப்பிரகாசம், ந. பட்டாபிராமன் ஆகியோர் முன்னிலை வகித்தனர் திரு. பு. இரா. முத்துக்கிருட்டினன் தலைமை தாங்கினார். திரு. வே. இராசவேலன் அனைவரையும் வரவேற்றார். திருமிகு. திருக்குறளார் வீ. முனுசாமி அவர்கள் திரு. வி. க. படத்தைத் திறந்து வைத்தார். "நிலாமுற்றம்" கவிதை நூலின் ஆசிரியர் திரு. வேலூர் ம. நாராயணன் அவர்கட்குப் பாராட்டுவிழா நடந்தது. கவிஞரைப் பாராட்டி தமிழன்பர்கள் பலர் பேசினர். பாராட்டுக்கு நன்றி தெரிவித்து ம. நாராயணன் பேசினார். திரு. வீ. முனுசாமி அவர்கள் வாலியும், சீதையும் என்ற பொருள் பற்றிச் சிறப்புப் பேருரை நிகழ்த்தினார். திரு. மா. சானகிராமன் நன்றி நவில விழா இனிதே முடிவடைந்தது.

**தமிழறிஞர் திரு. இராம. நமசிவாயம் மறைவு**

பாரத மாநில வங்கியில் (State Bank) மொழித்துறை பொறுப்பதிகாரியாகவும், திருநெல்வேலி கிளையில் கணக்காளராகவும் பணியாற்றிய தமிழறிஞர் திரு. இராம. நமசிவாயம் அவர்கள் அண்மையில் தமது 45ஆவது அகவையில் இதய நோய் காரணமாக, சென்னை மருத்துவமனையில் காலமானார்கள் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம். குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

**பேராசிரியர் வ. பா. கோபாலன் மறைவு**

வல்லை பாலசுப்பிரமணியனார் அவர்களின் இளைய மகனும் சென்னை அண்ணாநகர் கந்தசாமி நாயுடு கல்லூரித் துணைத் தமிழ்ப் பேராசிரியருமான திரு. வ. பா. கோபாலன், எம்.ஏ., பி.எசி., பி.எச்.டி. அவர்கள் 18—4—1983ல் பேரா இயற்கை எய்தினார் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம். மறைந்த பேராசிரியரின் தந்தையார் அவர்கட்கும். அவர்தம் குடும்பத்தார்க்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

———

# மதிப்புரை

**நீ வந்த நேரம்**

ஆசிரியர்: ஏர்வாடி எஸ். இராதாகிருஷ்ணன், சுதா பதிப்பகம் 4, முத்து முதலித்தெரு, புரசைவாக்கம், சென்னை-600 007, விலை: ரூ. 10-00]

திரு. ஏர்வாடி எஸ். இராதாகிருஷ்ணன் அவர்கள், வானொலி, தொலைக் காட்சிகட்காக எழுதிய எட்டு நாடகங்களுள் 'நீ வந்த நேரம்' என்னும் நாடகத்தின் பெயரைத் தலைப்பாகக் கொண்டு வெளிவந்துள்ளது இந்நூல். ஏழை—பணக்காரன், உயர்ந்தவன்—தாழ்ந்தவன் என்னும் வேற்றுமைகளை நீக்கவும், குமுகாயத்தில் காணப்படும் பிற சீர்கேடுகளை நாடக மாந்தர் மூலம் சுட்டிக்காட்டி குமுகாயத்தைச் சீர்திருத்தவும் முனைந்திருக்கிறார் இந்நூலாசிரியர் என்பது இந்நாடகங்களால் அறியக் கிடக்கும் உண்மையாகும். படிப்போர் உள்ளத்தைத் தொடும் வகையில் இந்நாடகங்களை உருவாக்கியுள்ள ஆசிரியரின் எழுத்தாற்றல் பாராட்டத்தக்கது. முன்னாள் சென்னை வானொலி வர்த்தக ஒலிபரப்பு இயக்குநர் திரு. ஏ. ஏ. ஹகீம் அவர்களின் அணிந்துரை இந்நூலாசிரியரின் முத்தமிழ் ஆற்றலை விளக்கும் நல்லதோர் உரைகல்லாக அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. ஆசிரியரின் முயற்சிகள் வெல்க! வாழ்க!

**நசகாண்டம்—மூலமும் உரையும்**

[ஆசிரியர்: வீரமாமுனிவர். உரையாசிரியர் மா. வடிவேலு முதலியார். பதிப்பாசிரியர் டாக்டர். ந. கோவிந்தசாமி, R. I. M. P. வெளியீடு: புதுவை மாநிலத் தமிழ் எழுத்தாளர் பேரவை, 97/10 கோவிந்த சாலை, புதுவை-605 001. விலை: ரூ. 1-50]

வீரமாமுனிவர் தமிழில் இலக்கண இலக்கிய நூல்களை எழுதியுள்ளார் என்பதைத் தான் நாம் அறிந்திருக்கிறோம். அவர் மருத்துவ நூலொன்றும் எழுதியுள்ளார் என்பதும், அது தமிழ்ச் சித்த மருத்துவ மரபை ஒட்டியே எழுதப்பட்டுள்ளது என்பதையும் இந்நூலினைப் பயில்வோர் நன்கு அறிந்து கொள்ளலாம். இதில் நோய்களின் தன்மைகளும், மருத்துவப் பொருள்களைச் சுத்தி செய்யும் முறைகளும் கூறப்பட்டுள்ளன. புதுவை அறிஞர் பி. எல். சாமி அவர்கள் இந்நூலுக்கு நல்லதோர் அணிந்துரை வழங்கியுள்ளார். பழைய ஏட்டுப் படியினின்று இதனைப் பதிப்பித்தவர்களின் முயற்சி பாராட்டத்தக்கது.

**Unmai Vilakkam (The Exposition of Truth of Manavasagam Kadanthar)**

C. N. Singaravelu, Siva manam, 31, Second cross street, west C. I. T. Nagar. Madras-35, Rs. 6/-

சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள், மனவாசகம் கடந்தார் அருளிய உண்மை விளக்கமும் ஒன்றாகும். இதனைத் தமிழறியாத பிறமொழியினர், குறிப்பாக ஆங்கிலம் கற்றவர்கள் எளிதில் படித்துப் புரிந்து கொள்ளும் வகையில் வினா விடை முறையில் எழுதியிருக்கும் ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது.

**உணர்வுகள் அழிவதில்லை!**

[ஆசிரியர்: புலவர் தி. நா. அறிவுஒளி, எம்.ஏ., எம்.எட்., 23. மன்றவெளித் தெரு, நால்வர் பேட்டை, திருக்கழுக்குன்றம். 603109. விலை: ரூ. 3-00]

பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த காப்பிலித் தேவன் என்னும் வீர மறவனொருவனின் தன்மான உணர்வினை மையமாக வைத்து, நாட்டுப்பற்று, வீரம், ஈகம் ஆகிய பண்புகளை விளக்கும் கற்பனை வளம் நிரம்பியது 'உணர்வுகள் அழிவதில்லை' என்னும் இக் கதை, இந்நாளில் மிக இன்றியமையாது தமிழருக்குத் தேவைப்படும் உணர்வுகளை ஊட்ட வல்லதாக இந்நூல் அமைந்துள்ளது.

**அரியலூர் மணிவாசக மன்ற வெள்ளிவிழா மலர்**

[கிடைக்குமிடம்: மணிவாசகர் மன்றம், அரியலூர், திருச்சி மாவட்டம். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-108. விலை: ரூ. 15-00.]

இம்மலர் 19—8—1972ல் ஆவணி மூலத் திருநாளில் நடைபெற்ற அரியலூர் மணிவாசக மன்றத்தின் வெள்ளி விழாவின்போது வெளியிடப்பெற்றது. இதில் மதுரை ஆதீனம், குன்றக்குடி ஆதீனம், காஞ்சிபுரம் தொண்டை மண்டல ஆதீனம், திருப்பேரூர் ஆதீனம் ஆகிய ஆதீனத் தலைவர்களின் அரிய சமயக் கட்டுரைகளும், மற்றும் தமிழ்ப் பேராசிரியப் பெருமக்கள் பலரின் அரிய கருத்தோவியங்களும் இடம் பெற்றுள்ளன. அறிவுக்கும் பக்திக்கும் விருந்தளிக்கும் அழகிய மலர். 225 பக்கங்கள்—படங்களுடன் கூடியது.

**செந்தமிழ்க் கவிதைகளும் சிந்தனைக் கட்டுரைகளும்**

[ஆசிரியர்: புலவர் பழனி மகாதேவன், ஸ்ரீலஸ்ரீ ஞானியாரடிகள் பதிப்பகம். ஆம்பூர், வ. ஆ. விலை: ரூ. 5-00.]

இந்நூலாசிரியர் பல்வேறு சமயங்களில் இயற்றி இதழ்களில் வெளியிட்ட, கவிதைகள், கட்டுரைகள் தொகுப்பே இந்நூல். இதில் 23 தலைப்புகளில், வள்ளுவர், பிளேட்டோ போன்ற பேரறிஞர்களைப் பற்றியும், கல்வியின் இன்றியமையாமை, கடமை உணர்ச்சி, இன்னபிற பொருள்கள் பற்றிய கவிதைகளும் சிவலிங்க வழிபாடு, சைவ சமய உண்மைகள் மற்றும் பல வரலாற்றுக் கருத்துகள் அடங்கிய கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன.

### மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-௫௭, பரல் ௮. ௬௭௦ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| உயர்திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப். அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, கே. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் | 25-00 |
| ,, முத்துக்குமாரசாமி பிள்ளை அவர்கள் | 13—00 |
| ,, A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை. | 5—00 |
| ,, விசாகநம்பி. அவர்கள் சென்னை | 5—00 |

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப்.

———

## கழக நிலையங்களில் கிடைக்கும்
## பிற பதிப்பாளர்களின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| கவிராஜன் கதை—கவிஞர் வைரமுத்து | 14 | 00 |
| நான் விமர்சிக்கிறேன்—வலம்புரிஜான் | 4 | 00 |
| காதல் கடிதங்கள்— ,, | 4 | 00 |
| தாகங்கள் — ,, | 4 | 00 |
| இந்து சட்டப்படி மகளிர் சொத்துரிமை—சோ. சேசாசலம் | 10 | 00 |
| குரு சிஷ்ய பரம்பரை—சுவாமிநாத ஆத்ரேயன் | 5 | 00 |
| தமிழர் எண்ணங்கள்—க. காந்தி | 16 | 00 |
| மாணிக்கவாசகர்—கோ. வன்மீக நாதன் | 4 | 00 |
| குத்பு நாயகம்—செய்கு அப்துல் காதர் நயினர் | 21 | 00 |
| தமிழ்மொழியும் அதன் சீரழிப்பாளர்களும் —புலவர் ந. கி. நல்லப்பன் | 9 | 50 |
| இன்பமாக வாழ்வது எப்படி?—சுவாமி சச்சிதானந்தர் | 15 | 00 |
| கஸ்தூரிபா கதைகள்—கே எஸ். ஜம்புநாதன் | 7 | 50 |
| நர்மதா நளபாக சமையல்—திருமதி இராஜம் அனந்தராமன் | 9 | 00 |
| தியாகச் சுடர்—பி. எஸ் ஆர். ராவ் | 13 | 00 |
| துப்பறியும் துக்காராம்—பொன் பரமகுரு | 6 | 90 |
| தமிழ்நாட்டு வரலாறு – இறையரசன், எம் ஏ. | 14 | 50 |
| அந்த நந்தனை எரிச்ச நெருப்பின் மிச்சம்—தமிழன்பன் | 4 | 90 |

பதிவு எண் 4899 May 1983



அப்பர் அச்சகம், சென்னை-108.